Regd. No. 2975.

ஸ்ரீ:

# SRI RAMANUJAN

*Editor:* P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3.

# ஸ்ரீ ராமாநுஜன் 242

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 6 ஜீவியச் சந்தா ரூ. 116.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார்ஜீயர் திருவடிகளே சரணம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி *
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி *—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி *
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1969 பிப்ரவரி௴ கீலக௵ மாசி௴

# ஸ்ரீ உ.வே. P. B. அண்ணங்கராசாரியார் சுவாமிகளின் நூல்களுக்கு ஜாபிதா.

திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகையென்னும் விரிவுரையானது நாலாயிரத்திற்கும் ஸ்ரீ ஸ்வாமிகள் இயற்றியது உலகம் பரவியுள்ளது. (பதவுரை, கருத்துரை, விசேஷவுரை.)

| | ரூ. | ந-பை |
|---|---|---|
| **முதலாயிரம்** | | |
| திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் | 6 | 00 |
| திருப்பாவை ஆழ்பொருள் விளக்கு | 2 | 00 |
| சங்கத் தமிழ் மாலை முப்பதும் திருப்பாவை ஜீயரும் | 1 | 50 |
| திருப்பல்லாண்டு முதல் நாச்சியார் திருமொழிவரை எளியவுரை | 3 | 50 |
| நாச்சியார் திருமொழி, தீபிகை | 2 | 00 |
| பெருமாள் திருமொழி ,, | 2 | 00 |
| திருச்சந்த விருத்தம் ,, | 3 | 00 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி அமலனுதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு ,, | 4 | 00 |
| **இரண்டாவதாயிரம்** | | |
| பெரியதிருமொழியாயிரம் திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டக முட்பட | 15 | 00 |
| **மூன்றாவதாயிரம்** | | |
| (இயற்பா) முதல் திருவந்தாதி முதலாக இராமாநுச நூற்றந்தாதி வரை திவ்யார்த்ததீபிகை | 15 | 00 |
| **நான்காவதாயிரம்** | | |
| திருவாய்மொழியாயிரம் தீபிகை | 25 | 00 |
| நித்யாநுஸந்தானவுரை | 5 | 00 |
| (ஷை இரண்டு பாகமாகவுமுண்டு) | | |
| திவ்யப்ரபந்தக் கண்ணுடி | 1 | 00 |
| ஆழ்வார்களுகந்த இராமன், ஆழ்வார்களுகந்த கண்ணன் | 1 | 00 |
| உபதேச ரத்தினமாலை, திருவாய் மொழி நூற்றந்தாதி ஆர்த்திப் பிரபந்தம் இவற்றின் உரை | 3 | 00 |
| ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்த காதை இவற்றின் உரை | 1 | 00 |
| **ஸகலபூர்வாசார்ய ஸ்தோத்ரங்களுக்கு உரைகள்.** | | |
| முகுந்த மாலை, ஸ்தோத்ரரத்னம் சதுச்சுலோகி | 2 | 50 |
| கத்யத்ரயம் | 2 | 00 |
| ஸ்ரீவைகுண்டஸ்தவம் | 2 | 50 |
| ஸுந்தரபாஹுஸ்தவம் | 2 | 50 |
| அதிமாநுஷஸ்தவம் | 2 | 00 |
| வரதராஜஸ்தவம், ஸ்ரீஸ்தவம் | 2 | 50 |
| ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசதகம் | 2 | 50 |
| ஷை உத்தரசதகம் | 2 | 50 |
| அஷ்டச்லோகி | 0 | 75 |
| ஸ்ரீகுணரத்நகோசம் | 1 | 75 |
| யதிராஜவிம்சதி, நக்ஷத்ர மாலிகை முதலான 16 ஸ்தோத்ரங்கள் | 3 | 50 |
| ஸுதர்சந சதக வியாக்கியானம் (மறு பதிப்பில்) | | |
| **ஆழ்வாராசார்யப் பெருமை நூல்கள்.** | | |
| ஆழ்வார்களின் வைபவம் | 1 | 00 |
| பூர்வாசார்ய ப்ரபாவம் | 2 | 00 |
| கூரத்தாழ்வான் வைபவம் | 1 | 00 |
| வேதாந்ததேசிக வைபவம் | 1 | 00 |
| மணவாளமாமுனிகள் வைபவம் | 1 | 00 |
| ஐப்பசித்திருமூல மலர் | 1 | 00 |
| நவரத்ன நவநிதி | 2 | 00 |
| **ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்** | | |
| முமுக்ஷுப்படி ஸாரமென்கிற திருமந்த்ர — த்வய — சரமச் லோகார்த்த விவரணம் | 2 | 00 |
| தத்வத்ரயஸாரம் | 2 | 00 |
| ஸ்ரீவசநபூஷணஸாரம் | 2 | 00 |
| ஆசார்யஹ்ருதயஸாரம் (மறு பதிப்பில்) | | |

(ராப்பர் 3-வது பக்கம் காண்க.)

# ஸ்ரீ ராமாநுஜன் — 242



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: **ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.**

ஸம்புடம் **21** | கீலக௵ மாசிமீ 1969 பிப்ரவரி வெளியீடு. | ஸஞ்சிகை **2**


# நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி

## 13. தலைச்சங்கநாண்மதியம்.

**செப்புங்கா லாதவனுந் திங்களும்வா னுந்தரையும்***
**அப்புங்கா லுங்கனலு மாய்நின்றான் — கைப்பால்**
**அலைச்சங்க மேந்து மணியரங்கத் தம்மான்***
**தலைச்சங்க நாண்மதியத் தான்.**

| | |
|---|---|
| கைப் பால் | திருக்கைத்தலத்தில் |
| அலை சங்கம் ஏந்தும் | அலைகடலில் தோன்றிய சங்கத்தை யேந்தியுள்ள |
| அணி அரங்கத்து அம்மான் | ஸ்ரீரங்கநாத ஸ்வாமியாய் |
| தலைச்சங்க நாண் மதியத் தான் | தலைச்சங்க நாண்மதிய மென்னுந் தலத்திலுறையும் பெருமான் |
| செப்புங்கால் | உண்மை யுரைக்குமிடத்து |
| ஆதவனும் திங்களும் | ஸூர்ய சந்திரர்களாயும் |
| வானும் தரையும் | ஆகாயமாயும் பூமியாயும் |
| அப்பும் காலும் கனலும் ஆய் | நீரும் காற்றும் நெருப்புமாயுமிருந்து |
| நின்றான் | ஸர்வாந்தர்யாமியாக நிற்பவன். |

* * * அருளிச்செயல்களில் *நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடுவானாய்ச், சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய்* என்றும், *உலவுதிரையுங் குலவரையும் ஊழி முதலா வெண்திக்கும் நிலவுஞ்சுடருமிருளுமாய் நின்றான்* என்றுமுள்ள பல பாசுரங்களைத் தழுவிப் பேசியது இப்பாசுரம். சராசரங்கள் யாவும் எம்பெருமானது வடிவமே யென்றவாறு. இத்தலத்தெம்பெருமானை நாண்மதியப் பெருமாளென்பர். ...

# ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜப்ருங்கராஜப் பெருமை.

சென்றவிதழில் *ஸ்ரீரங்கராஜ சரணாம்புஜ ராஜஹம்ஸப் பெருமையை வரைந்தோம். *ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜப்ருங்கராஜப் பெருமை இப்போது வரையப்படுகின்றது. [முன்னிதழில் பக்கம் 38ன் தொடர்ச்சி.]

11. நம்மாழ்வாருடைய திருவடித்தாமரைகளில் வண்டுபோன்றவர் எம்பெருமானார்—என்னும் பொருளையுடையது *ஸ்ரீமத் பராங்குச பதாம்புஜப்ருங்கராஜம்* என்னும் விசேஷணம். எம்பெருமானாரை வண்டாகச் சொல்லுகைக்குள்ள பொருத்தங்கள் சேளீர். நம்மாழ்வார் திருவிருத்தத்தில் வண்டுகளை விளிக்கும்போது *வீசுஞ்சிறகால் பறத்தீர்* என்னும் பாசுரத்தில் *விண்ணோர் பிரானார் மாசில் மலரடிக்கீழ் எம்மைச் சேர்விக்கும் வண்டுகளே* என்றருளிச்செய்துள்ளார். எம்பெருமான் திருவடிகளிலே அஸ்மதாதிகளைக்கொண்டு சேர்க்குந் திறமை எம்பெருமானார்க்கேயுள்ளது.

12. மேலேயெடுத்த பாசுரத்தின் தொடக்கம் "**வீசுஞ்சிறகால் பறத்தீர்**" என்பது; வண்டுகள் சிறகால் பறப்பது போல ஸ்வாமி யெம்பெருமானார் ஞானமனுட்டான மென்னுமிவற்றால் உயர்கதியடைபவர். *உபாப்யாமேவ பக்ஷாப்யாமித்யாதி.

13. *வீசுஞ்சிறகால் பறத்தீர்* என்றவுடனே "விண்ணாடும் நுங்கட்கு எளிது" என்றமையால் பரமபதமும் ஸ்வாமி யெம்பெருமானார்க்கு அதீனமான பொருள் என்பது காட்டப்பட்டது. ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தம் பெறாதவர்களுக்குத் திருநாட்டுச் செல்வம் கிடைப்பதரிது என்பது பூருவாசாரியர்களின் கொள்கை.

14. மேலேயெடுத்த திருவிருத்தப் பாசுரத்திற்கு அடுத்த பாசுரம்—*வண்டுகளோ வம்மின், நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூவுண்டுகளித்துழல்வீர்* என்பது. பூக்களானவை நீரிலும் நிலத்திலும் மரங்களிலும் புஷ்பிக்குமவை. தாமரை செங்கழுநீர் முதலானவை நீர்ப்பூக்களாம். மல்லிகை முல்லை முதலானவை நிலப்பூக்களாம். வகுளம் பாதிரி பாரிஜாதம் முதலானவை மரப்பூக்களாம். இவற்றில் தேனைப்பருகும் வண்டுகள். எம்பெருமானார்பக்ஷத்திலோ வென்னில்; **நீர்ப்பூ** என்பது க்ஷீராப்திசாயியான வ்யூஹ பகவானைச் சொல்லி அவனிடத்துத் தோன்றிய பாஞ்சராத்ர சாஸ்த்ரங்களைக் கூறும்; **நிலப்பூ** என்பது நிலத்திலவதரித்திருந்த ஸ்ரீராமக்ருஷ்ணாதிவிபவாவதாரங்களையும், நிலத்தில் நித்யமாக அமர்ந்திருக்கின்ற அர்ச்சாவதாரங்களையுஞ் சொல்லி, விபவாவதாரபரங்களான இதிஹாஸ புராணங்களையும் அர்ச்சாவதாரபரங்களான திவ்ய ப்ரபந்தங்களையும் அநுபவித்துக் களிப்பவர் ஸ்வாமி யெம்பெருமானார் என்றவாறும் ***மரத்திலொண்பூ** வென்று எட்டாநிலத்திலுள்ள பரமபதநாதனைச் சொல்லி *வேதவேத்யே பரே பும்ஸி* என்கிறபடியே பரம புருஷ ப்ரதிபாதகமான வேதங்களைச் சொல்லி அவற்றையநுபவிப்பவரெம்பெருமானார் என்று காட்டும்.

15. வண்டுக்கு **சஞ்சரீக** மென்று பெயர்; எப்போதும் திரிந்து கொண்டேயிருப்பது என்று பொருள். ஸ்வாமி யெம்பெருமானாரும் *ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரிஸிம்ஹாசலௌ ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ்ச பதரீநாராயணம் நைமிசம், ஸ்ரீமத் த்வாரவதீ ப்ரயாக மதுராயோத்யாகயாபுஷ்கரம் ஸாலக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முனி:* என்கிறபடியே *உலகமேத்துங்கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர்மல்லையென்றுமண்டி* பதியேபரவித் தொழுந் தொண்டராயிருந்தவர்.

16. வண்டுக்கு **மதுப:** என்று பெயர்; தேனைப் பருகுமது என்று பொருள். திருமங்கையாழ்வார் *உளங்கனிந்திருக்குமடியவர்தங்கள் உள்ளத்துளூறிய தேன்* என்று எம்பெருமானையே தேனாகக் கூறினர்; உபநிஷத்தும் ***அஸௌ வா ஆதித்யோ தேவமது*** என்று எம்பெருமானையே மதுவாக ஓதிற்று. அப்படிப்பட்ட மதுவையே நிச்சலும் பருகிக் களிப்பவர் ஸ்வாமியெம்பெருமானார்.

17. *வரிவண்டு தேதெனவென்றிசைபாடும்* என்றும், *தென்னாதெனாவென்று வண்டுமுரல்* என்றும் ஆழ்வார்கள் அருளிச்செய்தபடியே **தே, தே** என்று முரலும் வண்டுகள். (அஹங்கார) மமகாரமுள்ளவர்கள் **மே மே** என்பர்கள். அது நீங்கினவர்கள் **தே தே** என்பவர்கள். தவ, தவ. என்றபடி. *வெண்பல் தவத்தவர்* என்ற திருப்பாவைப் பாசுரத்தில் (தவ, தவ) என்பவர்கள் தவத்தவர்களாக விவக்ஷிதர்களாதலால் அங்ஙனே மமகாரமற்றவர்களில் தலைவர் ஸ்வாமி யெம்பெருமானார் என்க.

18. திருமங்கையாழ்வார் திருநறையூர்ப் பதிகத்தில் *வம்பவிழும் சண்பகத்தின் வாசமுண்டு மணிவண்டு வகுளத்தின் மலர்மேல்வைகு* என்கிற பாசுரத்தினால் வண்டு மகிழமலர்மேல் வைகியிருப்பதாகப் பாடினர். ஸ்வாமி யெம்பெருமானாரோவென்னில்; *யஸ்ய ஸாரஸ்வதம் ஸ்ரோதோ **வகுலாமோதவாஸிதம்*** [யதிராஜஸப்ததி] என்கிற படியே மகிழமலரின் நறுமணங்கமழும் திருவாய்மொழியில் வைகியிருப்பவர். நூற்றந்தாதியில் *உணர்ந்த மெய்ஞ்ஞானியர் யோகந்தொறும், திருவாய்மொழியின் மணந்தரு மின்னிசை மன்னுமிடந்தொறும் புக்குநிற்குமிராமானுசன்* என்ற பாசுரம் இங்கு அநுஸந்திக்கவுரியது.

19. வண்டுகள் சோலைகளிலும் தடாகத்திலும் மொய்த்துக்கொண்டிருக்கும். எம்பெருமானாராகிற வண்டு *வண்டினமுரலுஞ்சோலை மயிலினமாலுஞ்சோலை கொண்டல் மீதணவுஞ்சோலை குயிலினங்கூவுஞ்சோலை அண்டர்கோனமருஞ்சோலை யணிதிருவரங்கத்திலும், *தாமரைநீர் வாசத்தடமென்றும், *தயரதன்பெற்ற மரதகமணித் தடமென்றும் ப்ரஸித்தமான* ஹரிஸரஸ்ஸிலும் மொய்த்துக்கொண்டிருந்தமை ப்ரஸித்தம்.

20. வண்டு எங்குப் புகவேணுமானாலும் தடையொன்றுமின்றியே புகும். எம்பெருமானுடைய கர்ப்பக்ருஹத்தினுள்ளும் திருமேனியின் மேலும் தட்டுத் தடங்கலின்றியே புகும். எம்பெருமானாராகிற வண்டும் *அப்பனுக்குச் சங்காழி யளித்தருளும் பெருமாள்* என்னும் மூதுரையின்படியே திருவேங்கடமுடையானுக்குத் திருவாழி திருச்சங்கு அளித்தருள நுட்பமானவழியாலும் நுழைந்தமை ப்ரஸித்தம்.

21. வண்டு வடமொழியில் **த்விரேப** மென்று பெயர் பெற்றது. அது எதனாலென்னில்; தனக்கு மற்றொரு பெயரான **ப்ரமர** மென்னுஞ் சொல்லில் ரேபம் (ரகரம்) இரண்டிருப்பதனால். ஏகரேபரான எம்பெருமானார்தாம் (த்விரேபராகைக்காக) மணவாளமாமுனிகளாகப் புநரவதாரஞ் செய்து **வரவர** முனிகளென்று ரேபத்வயவிசிஷ்டமான திருநாமம் பூண்டு த்விரேபமாயினர். ஆக, முன்னிதழில் "நம் ஸ்ரீராமாநுஜன் இருபத்தோராவது பிராயத்தில் புகும் நன்னாளில் ஸ்ரீராமாநுஜரைப்பற்றி இருபத்தொரு விசேஷங்கள் மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியைக் கொண்டு விஜ்ஞாபிக்கப் படுகின்றன" என்றிட்ட ப்ரதிஜ்ஞையின்படி விஜ்ஞாபித்துத் தலைக்கட்டினோமானோம்.

# மன்னியசீர்மார்கழி யுபந்யாஸ விசேஷங்கள்.

மார்கழி மாதத்தின் பெருமை திவ்யதம்பதிகளின் திருவாக்கினால் எத்தனேயோ ஆண்டுகட்கு முன்பு வெளிவந்தது. திவ்யதம்பதிகளாவார் கண்ணபிரானும் ஆண்டாளும். கண்ணபிரான் *அகல் ஞாலத்தவரறிய நெறியெல்லாமெடுத்துரைத்த கீதையில் விபூத்யத்யாயமென்று ப்ரஸித்தமான பத்தாமத்யாயத்தில் (ச்லோ. 19.) *ஹந்த! தே கதயிஷ்யாமி விபூதீராத்மநச் சுபா:, ப்ராதாந்யத: குருச்ரேஷ்ட! நாஸ்த்யந்தோ விஸ்தரஸ்ய மே.* என்று, தன்னுடைய விபூதிகளை ப்ராதாந்யேந சொல்லுவதாக ப்ரதிஜ்ஞை செய்தான். இங்கு ப்ராதாந்ய சப்தத்தால் உத்கர்ஷம் விவக்ஷிதமென்று நமது பாஷ்யகாரர் உபபத்தியுடன் அருளிச் செய்தார். தனது மிகச் சிறந்த விபூதிகளை [அர்ஜுநனுடைய விருப்பத்தின்படி] அருளிச்செய்வதாக ப்ரதிஜ்ஞை செய்து பருப்பருத்தவற்றைச் சொல்லி வருகையில் (ச்லோ-35.) *மாஸாநாம் மார்க்கசீர்ஷோஹம்* என்றுரைத்து மாதங்களுக்குள் மார்கழி மாதத்திற்குள்ள சிறப்பை வெளியிட்டிருப்பது உணரத்தக்கது. ஆண்டாள் வாய்திறக்கும்போதே *மார்கழித்திங்கள் மதிநிறைந்த நன்னாளால்* என்று பேசி இம்மாதத்தின் சீர்மையை வெளியிட்டாள். ஆக, திவ்யதம்பதிகள் இங்ஙனே வெளியிட்டது பழுதாகாமே இப்பெருமை நாடெங்கும் நகரமெங்கும் ஊரெங்கும் உலகமெங்கும் ஏறக்குறைய நாற்பதாண்டுகளாகவே விசேஷித்துப் பரவிவருகின்றது.



முதன்முதலாக அடியேன் சென்னையில் திருப்பாவை யுபந்யாஸம் தொடங்கினது 1930ஆம் ஆண்டில். அப்போது ஒன்றிரண்டு சாரிடிகளில், பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்த மூவாயிரப்படி வியாக்கியானத்தைப் பங்க்தியடைவேஸேவித்துப் பொருள் விளக்குகிற ப்ராசீன காலக்ஷேப பத்ததியை ஓரிரு பெரியார்கள் கைக்கொண்டிருந்ததை யறிவேன். ஸ்ரீ வைஷ்ணவர்களாய்ப் பிறந்தவர்களிலும் சிலரோ பலரோ பாக்யஹானியாலே திவ்யப்ரபந்த வைரிகளாக இற்றைக்கும் இருந்துவருகிறார்களன்றோ? இத்தகைய மஹாநுபாவர்கள் "திருப்பாவையில் என்ன இருக்கிறது?" என்றிகழ்ந்துகொண்டிருந்ததையும் நன்கறிவேன். அன்னவர்கள் இப்போது "திருப்பாவையில்தான் எல்லாமிருக்கிறது" என்று சொல்லிக்கொண்டு தாங்களும் திருப்பாவை ப்ரவசனத்திற்கு முன்வருவது ஒரு விதத்தில் உகக்கத்தக்கதே. அவர்களுக்கு, மூலத்திலும் வியாக்கியானவாசிரியர்கள் பக்கலிலும் உள்ளமுமுடலும் நிரம்பிய மாச்சரியம் அகற்றவொண்ணாமலிருக்கச் செய்தேயும் ஏதோ நிமித்தத்தினால் திருப்பாவை ப்ரவசனகர்த்தாக்களென்று பேர்பெறுவது அஜ்ஞாத யாத்ருச்சிக ப்ராஸங்கிகாநுஷங்கிக ஸுக்ருதங்கள்போலே விலக்ஷண பாக்ய விசேஷமே. "என்னாரைச் சொன்னாய் என்பேரைச் சொன்னாய் என்னடியாரை நோக்கினாய் அவர்கள் விடாயைத் தீர்த்தாய் அவர்களுக்கொதுங்க நிழலைக் கொடுத்தாய்"

என்றுப்போலே மடிமாங்காயிட்டு விஷயீகரிக்குமெம்பெருமானுக்குப் பரமானந்தமே யாகுமென்பதில் ஐயமுண்டோ? *காதலின்றிக்கேயிருக்கப் பொய்யாகப் பேசும் புறனுரைக்கு மெய்யான பேற்றையுபகரிக்கும் பேரருளாளனுடைய பேரருளுக்கு இலக்காகாதாருளரோ? *எங்ஙனே சொல்லிலும் இன்பம் பயக்குமதான ஆண்டாளருளிச் செயலின் அரும்பெரும் பொருள்களின் அநுபவகோஷ்டிகள் எங்குந்தழைக்க மங்களா சாஸனம் செய்கிறோம்.

அடியேனுடைய ப்ரவசன கோஷ்டியைப்பற்றி இங்குச் சிறிது விஜ்ஞாபித்துக் கொள்ள விரும்புகிறேன். காளிதாஸ மஹாகவி "ஆபரிதோஷாத் விதுஷாம் ந ஸாது மந்யே ப்ரயோக விஜ்ஞானம்" என்று வித்வான்களின் உகப்பைப் பிரதானமாகச் சொன்னார். *வித்வாந் விபச்சித் தோஷஜ்ஞ:* என்ற அமரகோசத்தின்படி தோஷஜ்ஞர்க ளென்று விருதுபெற்ற வித்வான்கள் பரிதோஷமடைவது ப்ரயாஸஸாத்யமன்றோ. *போத் தாரோ மத்ஸர க்ரஸ்தா: ப்ரபவ: ஸ்மயதூஷிதா:, அபோதோபஹதாச் சாந்யே ஜீர்ண மங்கே ஸுபாஷிதம்* என்று உண்மையை வெளியிட்டார் பர்த்ருஹரி.

அரசாணிபாலை வேங்கடாத்வரி தமது ஸுபாஷித கௌஸ்துபத்தில்
"**வாசாடோக்தௌ வாகர்ருதே வா ஸுகவீநாம் ஸ்தோகப்ராஜ்ஞாஸ் துல்யத்ருசோ ஹந்த பவந்தி, கோமாயூநாம் கோகிலயூநாமபி சப்தேஷு ஏகாகாரா மாநஸவ்ருத்திர் மஹிஷாணாம்.**" என்றார். உண்மையில் இது மிகச் சிறந்த ஸுபாஷிதரத்னம். "நரிகள் ஊளையிடுவதும் குயில்கள் கூவுவதும் எருமைக்கடாக்களினுள்ளத்தில் வாசியறப் படிவதுபோல, வம்பர்களின் அரட்டைமொழிகளும், வாக்மிகளின் அமுதமொழிகளும் அல்பமதிகளுக்கு அவிசேஷமா யிருக்கும்" என்பது இந்த ஸுபாஷிதத்தின் கருத்து. ஆக, தோஷஜ்ஞர்களும் மத்ஸர க்ரஸ்தர்களும் அவிவேகிகளுமானவர்கள் மலிந்தவிடத்திலே பேசநேர்ந்தால் அதனை ப்ரபல பாபபலமாகவும் சாபபலமாகவும் நினைக்கவே நேரும். ஒரு ப்ரவக்தா சொல்லிவைத்தார்—

"**விவிதகஷ்டததிம் மம மஸ்தகே விலிக தாம் விஷஹே சதுராநந!,**
**அரஸிகேஷு கவித்வநிவேதநம் சிரஸி மாலிக மாலிக மாலிக.**" என்று.

'தெய்வமே! என் தலையில் எத்தனை கஷ்டங்களையும் நீயெழுது; ஸஹித்துக்கொள்ளு கிறேன்; ரஸமறியாத அவிவேகிகளிடத்தில் என்வாக்கைக் காட்டுவதாகிற கஷ்டத்தை மட்டும் என் தலையில் எழுதாதே, எழுதாதே, எழுதாதே.' என்றவாறு. இத்தகைய கஷ்டங்களுக்கு ப்ரஸக்திலேசமுமில்லாமல் பேசப்பெறுவதென்பது 'நால்பஸ்ய தபஸ: பலம்.' *கோரமாதவஞ் செய்தனன் கொலறியேன்* என்று உள்ளம் பூரித்து உரைக்க வேண்டிய பேறு இதுவேயாம். தோஷஜ்ஞர்களல்லாத வித்வான்களும், மத்ஸரக்ரஸ்தர் களல்லாத ப்ரபுத்தர்களும், அரஸிகர்களல்லாத அன்பர்களும் மலிந்த மஹாஸதஸ்ஸிலே அந்நாள் தொடங்கி இந்நாள்வரை பேசப்பெறுவதான பெரும்பாக்யம் வாய்த்த பேரானந்தத்தை வெளியிடாதொழியில் ஆத்மவஞ்சனையாகுமென்று இத்தனையும் எழுதலாயிற்று.

வித்வான்களிலும் வாக்மிகளிலும் வாவதூகர்களிலும் ரஸிகர்களிலும் ப்ரணயி களிலும் அக்ருத்ரிம ப்ரேமசாலிகளிலும் அக்ரகண்யரான ஸ்ரீமதுபயவே. சென்னை (எழும்பூர்) அட்வகேட். R. V. சேஷாத்ரியாசார்யர் Steno முறையில் சேகரித்த வொரு கட்டுரை அடுத்தபடியாக அன்பர்களுக்கு விருந்தாகும்; அதற்கு முன்னுரையாக இத்தனை யும் எழுதினேமென்றுங் கொள்ளலாம். ... ... ... ✿

### 13—1—69 திருப்பாவை சாத்துமுறை கோஷ்டியில்

# உயர்நீதிபதி கனம். திரு. அழகிரிசாமி அவர்கள் நிகழ்த்திய உரை.

முதன்முதலில் சபையோர்களுக்கு என் மன்னிப்பைத் தெரிவித்துக்கொள்கிறேன். ஏனெனில் நான் இங்கு வரும்போதெல்லாம் பக்தர்கள் அனைவரும் தரையில் உட்கார நான் ஒருவன் மட்டும் நாற்காலியில் உட்காருவது எனக்குப் பெரிதும் மனவருத்தத்தை யுண்டுபண்ணுகிறது. சிறுவயதில் தரையில் உட்கார்ந்து, மணலில் எழுதி, பனையேடுகளில் படித்திருந்தபோதிலும், பல வருஷங்களாகப் பழக்கமின்மையின் காரணமாக இப்போது நீண்டநேரம் தரையில் உட்காருவது மிகவும் சிரமமாய் இருக்கிறது. ஆகவே நான் தினந்தோறும் உபந்யாஸம் கேட்கவேண்டுமென்ற ஆசையிருந்தபோதிலும் சில நாட்களில் வரத் தயங்கினேன். நான் வராத காரணத்தை சபா நிர்வாஹிகளுக்குத் தெரிவித்தேன். அவர்களும் 'பரவாயில்லை, நாற்காலியிலேயே உட்காரலாம். நீங்கள் அவசியம் காலக்ஷேபத்திற்கு வரவேண்டும்' என்று அன்புடன் கூறினார்கள். அதன்பேரில் நான் சில நாட்களாக மனைவி, மகள் இவர்களுடன் காலக்ஷேபத்திற்கு வந்துகொண்டிருக்கிறேன். ஸ்வாமியும் ஸ்தானத்திற்காக (நான் வஹிக்கும்) கௌரவம் ஆகையால் நாற்காலியில்தான் உட்கார வேண்டுமென்கிறார். கோர்ட்டில் எனக்கு ஸ்தானமேயொழிய இங்கல்ல. இங்கு மற்ற பக்தர்களைப்போல் நானும் ஒரு சாதாரண பக்தன். தினந்தோறும் நீதிமன்றத்தில் ஆஸனத்தில் அமரும்போது அங்குக் கூடியுள்ள சபையோருக்கு வணக்கம் தெரிவித்து விட்டுத்தான் நீதிபதிகள் அமருவது வழக்கம். அதுபோல் வணக்கத்துக்குரிய இச்சபையில் மற்றவர்கள் கீழே உட்கார, நான் மட்டும் நாற்காலியில் உட்காருவது சரியல்ல. அது குறித்து நான் மிகவும்வருந்துகிறேன். அதற்காகச் சபையோர் என்னை மன்னிக்கவேணும்.

பிறருடன் அதிகம் பேசுவது, பேச்சுக்களைக் கேட்பது இரண்டும் எனக்குப் பிடிப்பதில்லை. அரசியலில் பல பேர்களின் பலவகையான பேச்சுக்களையே வெகுநாட்களாகக் கேட்டுக்கேட்டு எனக்குப் பேச்சென்றாலே அலுத்துவிட்டது. இருந்தும் என் நண்பர் திரு. சம்பகேசய்யங்கார், அட்வகேட் என்னை ஒருநாள் பைஸானி மாதவய்ய செட்டி சாரிடியின் சார்பில் நம் அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமிகள் நிகழ்த்திய உபன்யாஸத்திற்கு அழைத்துச் சென்றார். அதற்காக திரு. சம்பகேசய்யங்காருக்கு நான் மிகவும் கடப்பாடுடையவனாயிருக்கிறேன். அன்றுதான் முதன்முதலாக நான் ஸ்வாமியின் உபன்யாஸத்தைக் கேட்டேன். அதுமுதல் மீண்டும் மீண்டும் அவர்களின் உபன்யாஸங்களைக் கேட்கவேண்டுமென்ற அவா எனக்கேற்பட்டது. முடிந்தபோதெல்லாம் மனைவி மக்களுடன் கேட்டு வருகிறேன். அவர்களும் தங்கள் நண்பர்களிடமெல்லாம் ஸ்வாமியின் உபன்யாஸத்தின் பெருமையைப்பற்றிக் கூறிக்கூறி, அவ்வுபன்யாஸங்களுக்கு அவ்வவர்களையும் அவசியம் வரவேண்டுமென்றும், ஸ்வாமியின் உபந்யாஸங்களைக்கேட்டு ஆனந்திக்க வேண்டுமென்றும் கூறி வருகிறார்கள்.

ஸ்வாமியின் உபன்யாஸம் எனக்குப் பிடித்திருப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றில் முக்கியமாக இரண்டை இங்கே கூறுகிறேன். அருளிச்செயல், உபநிஷத்துக்கள்,

புராணங்கள், வியாகரணம், தமிழ் இலக்கண இலக்கியங்கள், சாகுந்தலம் முதலிய ஸம்ஸ்கிருத இலக்கியங்கள், முதலான எல்லாவற்றிலுமிருந்து கடல் அலைகள்போல் தட்டுத்தடங்கலின்றி மேற்கோள்கள் எடுத்துக்காட்டும் அழகு வேறு யாரிடமும் காண முடியாததொன்று. என்னதான் ஆங்கிலம் படித்திருந்தபோதிலும், B.A.B.L, M.A.B.L. முதலிய பெரிய பட்டங்கள் பெற்றிருந்தபோதிலும், இவ்விதமான ஆழ்ந்த படிப்பும், அதைப் பிறர்க்கெடுத்துச் சொல்லி அவர்களை மகிழ்விக்கும் ஆற்றலும் வேறு யாருக்கும் வராது. அடுத்தது ஸ்வாமியின் ஸமரஸமனப்பான்மை. இதைப்பற்றிக் கூறுமுன் ஒரு விஷயம் சொல்லநினைக்கிறேன்.

நான் பல வருஷங்களுக்குமுன் முதன்மந்திரிக்கு அந்தரங்கக் காரியதரிசியா யிருந்தேன். அதனால் என் நண்பர்கள் என்னைப் பெரியகோயில் பூசாரி என்று கேலியாகக் கூறுவது வழக்கம். கோயில்களில் முக்கியமான திருவரங்கமானது பெரியகோயில்என்று வழங்கப்படுவதுபோல், மாநிலத்தில் முதன்மந்திரியே பெரிய கோயில் என்னப்படுவர். அவருடைய காரியதரிசியான நான் பூசாரியாம். 1947-ம் ஆண்டில் நான் மேற்படி பதவியிலிருக்கையில் வைகாசி மாதத்தில் காஞ்சீபுரம் கருடஸேவைக்குப் போயிருந்தேன். அப்போது ஜில்லா கலெக்டர் S. வெங்கடேசுவரன், முன்னாள் நீதிபதி P. ராஜகோபாலன் முதலியவர்களும் அவ்விடம் வந்திருந்தனர். அங்கேதான் இந்த ஸ்ரீ வைஷ்ணவமதத்தின் கண் உள்ள தென்கலை, வடகலை ஆகிய இரு பிரிவுகளுக்குமுள்ள வேற்றுமை, மனக்கசப்பு இவற்றைப்பற்றித் தெரிந்துகொண்டேன். இரு பிரிவுகளுக்கும் உள்ள வேற்றுமை என்ன? என்று ஒரு நண்பரைக் கேட்டேன். அவரும் தென்கலை தமிழை முக்கியமானதாகக் கொண்ட வகுப்பு, வடகலை ஸம்ஸ்கிருதத்தைப் பிரதானமாகக்கொண்ட வகுப்பு என்று கூறினார். அவர் கூறிய இப்பாகுபாடு எனக்குத் திருப்தியளிக்கவில்லை. உடனே நான் ராமானுஜர் எல்லா நூற்களையும் ஸம்ஸ்கிருதத்திலேயே இயற்றியிருக்கிறார். தமிழில் ஒரு வரிகூட எழுதவில்லை; வேதாந்த தேசிகர் ஸம்ஸ்கிருதத்தில் பல நூற்களும், தமிழில் சில நூற்களும் இயற்றியுள்ளார்; அப்படியிருக்கையில் மேற்கூறிய பாகுபாடு எப்படிப் பொருந்துமென்று அவரைக் கேட்டேன். அவரும் வேறொருவர் பெயரைச் சொல்லி, அவரைக் கேட்டுச் சொல்வதாகக் கூறினார். 'எனக்கே அவரைத் தெரியும், நானே அவரைக் கேட்டுத் தெரிந்துகொள்கிறே'னென்று அவரிடம் கூறினேன். பிறகு இந்தப் பாகுபாடு ரஸமற்றது என்று தெரிந்துகொண்டேன். வேதாந்த தேசிகரும் மற்ற ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்களைப் போலவே ஒரு சிறந்த ஆசாரியர். மற்றவர்களுக்கும் அவருக்கும் யாதொரு பேதமும் கிடையாது; மற்ற ஆசாரியர்களைப் போலவே தேசிகரும் நாம் போற்றத்தகுந்த ஆசாரியர்' என்று ஸ்வாமி கூறி, தேசிகரின் வடமொழி தென்மொழி ஸ்ரீஸூக்திகளை மேற்கோள்களாக அடிக்கடி எடுத்துக்காட்டி நம் ஸ்வாமி ஸமரஸமாகப் பேசிவருவது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

Mc. cleon (மாக்ளியான்) என்னும் ஆங்கில ஆசிரியர் தாமெழுதிய Gazttear (கஜட்டியர்) என்னும் நூலில் தென்கலை, வடகலை இரு வகுப்புக்களையும்பற்றிக் கூறி, அவற்றுள் முதலாவதில் **மார்ஜாரசிசுநியாயம்** பின்பற்றப்படுகிறதென்றும், இரண்டாவதில் **மர்க்கடசிசுநியாயம்** பின்பற்றப்படுகிறதென்றும் கூறியுள்ளார். மயிலை மாதவதாஸன் பதிப்பு நாலாயிர திவ்யப்பிரபந்தம் என்னும் நூலில் ஒரு பக்கத்தில் தென்கலைத் தனியன்

களும், மற்ருெரு பக்கத்தில் வடகலைத் தனியன்களும் பிரசுரிக்கப்பட்டுள்ளன. இதெல்லாம் காரணமற்ற பேதங்கள். ஆராயப்போனுல் இவற்றில் ஒன்றுமில்லை.

ஸ்ரீ வைஷ்ணவ தரிசனத்திற்கே பொதுவான ஆசாரியர் ஸ்ரீ ராமானுஜர்; ஆனது பற்றியே இந்த தரிசனத்திற்கு ராமானுஜ தரிசனமென்று பெயர். அதை விட்டுவிட்டு ஸ்வாமி கூறுவதுபோல் தேசிக தரிசனம், பிள்ளை லோகாசார்ய தரிசனம், மணவாள மாமுனிகள் தரிசனம் என்றெல்லாம் கூறுவது சரியில்லையென்றே என் மனதில் தோன்றுகிறது. யாவர்க்கும் பொதுவான ஆசாரியரான ராமானுஜரையிட்டுக்கூறும் சொல்லான ராமானுஜ தரிசனம் என்னும் சொல்லே பொருத்தமானது. வேறு சொற்களையிட்டுக் கூறினுல் அது ராமானுஜரை இகழ்ந்ததாகவே ஆகும்.

நம் நாட்டில் நம்முடைய மதத்திற்குப் பெயர் கிடையாது; மதத்தை (செருக்கை) வெளிப்படுத்தும் ஒரு மதமாக நாம் நம்மைக் கூறிக்கொள்வதில்லை. அந்நிய நாட்டார்தான் நம்மை ஹிந்துக்களென்றும், நம் மதத்தை ஹிந்து மத மென்றும் கூறினுர்களேயொழிய, நம் மதத்தை **ஸனுதன தர்மம்** என்றே நம் முன்னேர் கூறிவந்தனர். ஸனுதன தர்மம் என்னும்போது தவருக அது ஏதோ ஒரு பாகுபாடு என்று நினைத்துவிடவேண்டாம். எக்காலத்திலும் எப்போதும் இருக்கும் உயர்ந்த உண்மைகள் என்றுதான் அதற்குப் பொருளேயொழிய வேறு ஒன்றுமில்லை. ஆரிய சமாஜம், பிரம்ம ஸமாஜம் முதலிய இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் **ஸனுதன தர்மம்** என்பது குறைகூறத்தகுந்த ஏதோ ஒன்று என்று கூறினபோதிலும், அதில் குறைகூறத்தகுந்ததாக ஒன்றும் இல்லை. எல்லாருக்கும் பொதுவான நெறியே ஸனுதன தர்மம். த்வைதம், அத்வைதம், விசிஷ்டாத் வைதம் என்று பல பேதங்கள் நம்மிடையே காணப்பட்டபோதிலும் ஸனுதன தர்மம் என்பது யாவர்க்கும் பொதுவானது.

நம் ஸ்வாமி எங்கு யாரிடம் தவறு இருந்தாலும் சிறிதும் தயங்காமல் அதை எடுத்துச் சொல்லிவிடுவார். பயம் என்பதே அவரிடம் கிடையாது. அதற்குக் காரணம் அவருடைய தெளிந்த ஞானம்தான். ஒவ்வொருவரும் தன்தன் மதத்தில் உறுதியாக இருக்கவேண்டும்; மற்ற மதங்களை இகழக்கூடாது. ஒரு தெய்வத்தை வழிபடுபவன் அதை விட்டு மற்றொரு தெய்வத்தைப் பற்றினுல் இரு தெய்வங்களும் அவனைக் கைவிட்டு விடும் என்று வேதமுரைப்பதாக நம் ஸ்வாமி எடுத்துக் கூறினர்.

எனக்கு ஸம்ஸ்கிருதம் தெரியாது. என் நண்பர் C. சுப்பிரமணியம் 50 வயதுக்கு மேல் சம்ஸ்கிருதம் பயின்று வருகிருர். மற்றொரு நண்பர் 50 வயதுக்குமேல் ஸம்ஸ்கிருதம் பயில ஆரம்பித்து சாகுந்தலம், பாதுகாஸஹஸ்ரம், வால்மீகி ராமாயணம் முதலிய நூல்கள் படித்துவருகிருர். எனக்கும் ஸம்ஸ்கிருதம் பயிலவேண்டுமென்ற ஆசையிருப்பினும் அவகாசமின்மையால் படிக்கமுடியவில்லை.

அதிக ஆசையால் வழக்கத்தைமீறிப் பேசியதுமல்லாமல் அதிகம் பேசிவிட்டேன். சபையோர் என்னை மன்னிக்கவேண்டும். ‘மணவாள மாமுனியே இன்னுமொரு நூற்ருண்டிரும்’ என்பதுபோல் நாம் நம்ஸ்வாமிக்கு ‘இன்னுமொரு நூற்ருண்டிரும்’ என்று மங்களாசாஸனம் செய்யவேண்டும். இத்துடன் என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

இப்படிக்கு நேரில் செவிமடுத்த,
R. V. சேஷாத்ரி, Advocate. 13-1-69

# சென்னை மாம்பலத்தில் திருப்பாவை ஸதஸ்ஸு.

சென்னை மேலைமாம்பலத்தில் "ஸ்ரீ சாரதா உயர்தர ஆரம்பப்பள்ளியில் 5—1—69 ஞாயிற்றுக்கிழமையன்று பகல் 12 மணிமுதல் 4 மணிவரையில் திருப்பாவை வித்வத் ஸதஸ்ஸு மிகவும் புனித மான முறையில் நடை பெற்றது மகிழ்ச்சியுடன் குறிப்பிடத்தக்கது. ஸ்ரீ வைஷ்ணவகுல பரமா சார்யராய் விளங்கும் ஸ்ரீமதுபயவே. கோயில் கந்தாடை முதலியாண் டான். பெரியஸ்வாமி இந்த வித்வத் ஸதஸ் ஸுக்கு அக்ராஸனம் வஹித்தருளி, செவிக் கினிய செஞ்சொற்களைப் பொழிந்து ஸதஸ்ஸைத் தொடங்கியருளினர். ஸ்ரீமதுபயவே. வித்வான். தேசி. ரங்கராஜாசாரியர் திருப்பாவையில் சில அருமையான விஷயங் களையெடுத்துரைத்தார்.





திருப்பாவைக்கு பட்டரருளிச்செய்த *நீலா துங்கஸ்தநகிரிதடீ த்யாதி தனியனில் "பாரார்த்த்யம் ஸ்வம் ச்ருதிசத சிரஸ்ஸித் தம் அத்யாபயந்தீ" என் றுள்ளதானஇரண்டாவது பாதத்தைக் கொண்டு, ச்ருதிஸித்தமாயும், ச்ருதி சதஸித்தமாயும், ச்ருதி சிரஸ்ஸித்தமாயு முள்ள அர்த்த விசேஷங்கள் திருப்பாவையில் விளங்கு மிடங்களை (P. B. A.) விவரித்தேனடியேன்.

அதன் பிறகு, ஸ்ரீமது பயவே. வித்வான். பிள்ளை லோகம் பாஷ்யகாராசாரியர்ஸ்வாமி திருப்பாவையில் சுவையிக்க சில அர்த்த விசேஷங்களை உபந்யஸிக்க ஆரம்பித்தார். அப்போது அடியேன் வேறொரு ஸதஸ்ஸுக்கு விடை

கொள்ள வேண்டியிருந்தபடியாலே பூர்த்தியாகவிருந்து கேட்கப் பெற்றிலேன். அதன் பிறகு எழுந்தருளின வித்வான்களின் சொற்பொழிவையுங் கேட்க அவகாசமில்லையா யிற்று. இந்த ஸதஸ்ஸை நடத்திவைத்தவர்கள் மேலே குறித்த பள்ளியில் மானேஜர் பதவியை வஹிக்கும் ப்ரஹ்மஸ்ரீ N. வெங்கட ராமய்யரவர்களை முன்னிட்ட சில மஹநீயர்களாவர். இதர ஸதஸ்ஸுக்களிற்போல் 5 நிமிஷம், 6½ நிமிஷம் என்று கெடுவிட்டுப் பண்டிதர்களைக் கொலை பண்ணாமலும், மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுவதுபோல் சேராச் சேர்த்தியான விஷயங்களைப்பேசவைத்துப் பரிபவியாமலும், திருப்பாவை மூலமும் கற்காமல் கீச்சுக் கீச்சென்னும் பண்டிதர்களைப் புகவிடாமலும் ஸாத்விகர்கள் குலாவும் முறையில் நடத்தப்பட்ட ஸதஸ்ஸு இதுவேயென்று பலரும் பேசிக் கொண்டது செவியில் விழுந்தது.





ஸ்ரீமதித்யாதி. முதலியாண்டான் ஸ்வாமி திருநாராயணபுரத்திலிருந்து திருமலைக் கெழுந்தருளி மார்கழி முப்பதும் தப்பாமே திருவத்யயநோத்ஸவமுட்பட திருமலையப்பனுடைய வைபவங்களையெல்லாம் அநுபவித்து வழுவிலாவடிமை செய்து கொண்டிருந்து, சென்னைவாஸிகளின் வேண்டுகோளுக்குத் திருவுள்ளமிரங்கி, திருமலையனுபவத்திற்கும் விச்சேதமின்றியே யெழுந்தருளி ஸதஸ்ஸை ஸநாதமாக்கியருளினது ஸ்ரீவைஷ்ணவ ஸமூஹத்திற்கெல்லாம் பரமானந்த ஸந்தோஷ ஸந்தாயகமாக விருந்தது. ஸ்ரீ ஸ்வாமிக்கு கோயில் திருமலை பெருமாள்கோயில் திருநாராயண

புரமென்னும் திவ்யதேசங்கள் நான்கும் நிஜஸ்தலங்கள் என்னலாம். ஸ்ரீ ஸ்வாமியைப்போல் கோஷ்டீபரிபாலனமும் சிஷ்யோஜ்ஜீவனமும் ஸம்ப்ரதாயக்ரந்த ப்ரவசனமும் செய்து போருமவர்களைத் தேடிப்பிடிக்கவேணும். "ஸ்மிதபூர்வாபிபாஷீ" "ம்ருதுமதுரபாஷீ" என்று எத்தனை விருது களிட்டாலும் ஸ்ரீ ஸ்வாமிக்கு ஏற்கும். *வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர் மண்ணூடே* என்கிற நம்மாழ்வார் மங்களாசாஸனம் ஸ்ரீஸ்வாமிக்குப் பலிக்க வேணுமென்று ஆசாஸியாதாரில்லை. "ரூபமேவாஸ்யை தந் மஹிமாநம் வ்யாசஷ்டே" என்னும்படியாக ஸ்ரீ ஸ்வாமியின் திவ்ய மங்களவிக்ரஹத்தின் காம்பீர்யமே பக்தர்களுக்கு ஓவாதவூணாயிருக்கும்.



ஸ்ரீமான் உவே. அட்வகேட். (குன்றபாக்கம்) T. V. ஸ்ரீநிவாஸாசாரியர் ஸ்வாமி, ஸ்ரீ கபிஸ்தலம் A. ஸ்ரீநிவாஸ அய்யங்கார் முதலானோருடைய முயற்சியினால் ஸதஸ்ஸு சிறப்புற நடந்தது. பிரபல ஜ்யோதிஷமணி. ஸ்ரீ உவே. காழியூர். ம. ஸ்ரீநிவாஸாசாரியரும் ஸதஸ்ஸில் கலந்துகொண்டது குறிப்பிடத்தக்கது. இந்த ஸதஸ்ஸு மேன்மேலும் அபிவிருத்தியடைந்து விலக்ஷணமான பல நற்காரியங்களில் ஈடுபடவேணுமென்று பல மஹான்கள் ஆசாஸித்தனர். ... ❋

## மற்றொரு திருப்பாவை ஸதஸ்ஸு

சென்னை ஜியார்ஜ்டவுன் கிருஷ்ணப்ப நாயகன் அக்ரஹாரத்திலுள்ள ச்ருங்கேரி சங்கரமடத்தில் மேலேகுறித்த நாளிலேயே காஞ்சீபுரம். ஸ்ரீமது உவே. ஸ்ரீதரதாதாசாரியர் ஸ்வாமியின் தலைமையில் திருப்பாவை ஸதஸ்ஸு நடைபெற்றது. ஒவ்வொரு வித்வானும் ஐந்து பாசுரங்களின் ஸாரப்பொருளை உபந்யஸிக்க இசைந்து ஆறு வித்வான்கள் அரைமணி முக்கால்மணி யதாஸௌகர்யம் பேசித் தலைக்கட்டினார்கள். ஜி. டி. பெருமாள் முதலித் தெருவில் வாழும் பரமபக்த சிகாமணி ஸ்ரீமான் D. M. அக்ரவாலா அவர்கள் முன்னின்று நடத்து மிந்த ஸபையின் பெருமை கொண்டாடத்தக்கதே. இதுவும் மேன்மேலும் அபிவிருத்தியடையுமாக. ... ... ... ○

### கவனிக்கவேண்டிய பிழை திருத்தம்.

13—1—69ல், ஹைகோர்டு ஜட்ஜ் அவர்கள் நிகழ்த்திய உரை கீழே 6, 7, 8 பக்கங்களில் வெளிவந்திருப்பதில் (பக்கம் 7ல்) மாக்ஸியான் என்னும் ஆங்கில ஆசிரியர் தாமெழுதிய சஜட்டியர் என்னும் நூலில்—என்ற விடத்தில் நூலின் பெயர் அதுவன்று, (மான்யுவல் ஆப் அட்மினிஸ்ட்ரேஷன்) என்று திருத்தப்படவேணுமென்று கட்டுரையாசிரியர் தெரிவிப்பதால் இவ்விதமாகத் திருத்தி வாசிக்கவேணுமென்று வாசகர்கள் கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். ... ... ... ○

# ஸ்ரீமதுபயவே. திருவஹீந்திரபுரம். ஸ்ரீநிவாஸராமாநுஜாசாரியர்ஸ்வாமியின் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவக் காட்சி.

ஸ்ரீமத். கடலூர் அட்வகேட். T. S. ராமாநுஜாசாரியர்ஸ்வாமி ஸ்ரீ வைஷ்ணவ வுலகில் மிகப்ரஸித்தர். இவர்க்கு ஜன்மபூமி திருவயிந்திரபுரம். அவ்விடத்தில் வேதவித்யா ஸம்பந்ந ஸார்வபௌமராக எழுந்தருளியிருந்து சில ஆண்டுகட்கு முன்னே திருநாடலங்கரித்த திருவேங்கடாசார்ய ஸ்வாமியின் புத்ரரத்னமான இந்த மஹான் லௌகிகவித்யையிற் போல வைதிகவித்யையிலும் ப்ரவீணர். இளமையில் உபயுக்த வேதாத்யயனம் செய்து உபயவேதங்களிலும் ஒருநிகரான ஆதர அபிமான முள்ளவர். *ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்* என்று எம்பெருமானுக்குள்ள பெருமை இந்த ஸ்வாமிக்கும் ஏற்கும். அடியேனுக்குப் பலவாண்டுகளாக ஸந்நிக்தராசையாலே இவரது சுபகுண விசேஷங்களை நன்கறியும் பாக்யமுடையேன். இந்த ஸ்வாமிக்கு நேற்றை மார்கழிக்கேட்டையில் (19-12-68ல்) ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் திருப்பாப்புலியூரில் தமது திருமாளிகையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. பூர்வாங்கமாக முன்னம் 6 நாள் ஸம்ஹிதா பாராயணாதிகளை நன்கு நடத்திவைத்து திவ்யதேச ப்ரஸாதங்களையும் பெற்று மகிழ்ந்தார். ஏற்கெனவே வாக்மி சிரோமணியான ஸ்வாமிக்கு ப்ரஜ்ஞாப்ராஸாதமென்று விருதளித்து அடியேன் தன்யனானேன். மாங்களிக தம்பதிகளையும் மஹா வைதிக கோஷ்டியையும் இங்கு ஸேவிக்கப்பெறுகிறீர்கள். ஸ்வாமி ஸகுடும்பராய் பல்லாண்டு பல்லாண்டு இவ்விபூதியிலே வாழ்ந்துவிளங்கவேணும். ...





# (வைகுண்டவாஸி) ஸ்ரீமதுபயவே. கோயில். எம்பார். ராமாநுஜாசாரியர் ஸ்வாமி.



ப்ரசண்ட பண்டிதோத்தமரென்று ப்ரஸித்தராயெழுந்தருளியிருந்தவரும் மஹாயசஸ்வியுமான ஸ்ரீரங்கம் எம்பார் க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் மூத்த திருக்குமாரராய் (எம்பார் ஸம்பத்ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்த) ஸ்ரீ ராமாநுஜாசாரியர் ஸ்வாமி (25—8—68ல்) பெங்களூர் நகரத்தில் திருநாடலங்கரித்த விஷயம் ஏற்கெனவே ஸ்ரீ ராமாநுஜன்—238ல் வெளியிடப்பட்டிருந்தது. அந்த ஸ்வாமியின் பெருமைக்குத் தக்கபடி அப்போதே நடந்த திருவத்யயன கோஷ்டியின் திருவுருவப்படம் சிறிது தாமதமாக நமக்குக் கிடைத்தபடியால் அஃது இங்கே வெளியிடலாகிறது. ஸ்வாமியின் திருக்குமாரரான எம்பார் ஸ்ரீநிவாஸாசாரியர் சிரோபூஷணத்துடனும் தோள் மாலையுடனும். இங்கே கீழே ஸேவை ஸாதிப்பவர்



தீபாதுத்பந்ந ப்ரதீபமாய் மஹா தேஜஸ்வியாய் விளங்கிவருவது ஸ்ரீ வைஷ்ணவவுலகின் பரமபாக்யம். இந்த ஸ்வாமி ஞானக்கலைகளுக்கு நிதியாய் பெங்களூரிலேயேயிருந்து கொண்டு சிஷ்யோஜ்ஜீவனம் செய்துவருகிறார். ... ... ❋

## ஸ்ரீபெரும்பூதூர்—யதிராஜ ஜீயர்மடம்.

செங்கற்பட்டு ஜில்லா ஜட்ஜ் உத்தரவுபடி ஸ்ரீபெரும்பூதூர் எதிராஜஜீயர்மடம் கோர்ட்டு அமீனுவால் போலீஸ் பந்தோபஸ்துடன் பூட்டுகள் உடைக்கப்பட்டு 10—1—69 தேதியன்று ஸ்ரீமத் பரமஹம்ஸ. ஜீயர் ஸ்வாமிகள் வசம் ஒப்புவிக்கப்பட்டு அன்றுமுதல் பிரதிதினமும் ஆண்டாள் எண்ணெய்க்காப்பு உத்ஸவமும், போகியன்று திருக்கல்யாண மஹோத்ஸவமும் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இனி மாமூல்படி ஸ்வாமியின் மண்டபப்படிகள் நடைபெற்றுவரும்.

இப்படிக்கு,
Agent. Sri Ethirajajeermutt.

## அபூர்வக்ரந்த வெளியீடு.

நம்முடைய ஸம்பிரதாயத்திற்கு மிக முக்கியமானது குருபரம்பராப்ரபாவம். ஸகல ஆழ்வார்களினுடையவும், நாதமுனிகள் தொடங்கி நம்பிள்ளை வரைக்குமுள்ள ஆசாரியர்களினுடையவும் சரித்திரங்களையும் வைபவங்களையு முணர்த்துவது குருபரம்பரா பரபாவ மென்னும் நூல். இது, மூவாயிரப்படி, ஆறுயிரப்படி, பன்னீராயிரப்படி யென்று மூன்றுபடியாகக் காணப்பட்டாலும் ஆறுயிரப்படி யொன்றுதான் பிராமாணிக மென்று பெரியாரிடம் பலகால் கேட்டதுண்டு. நம்பிள்ளை திருவடிகளில் தலைவரான பின்பழகியபெருமாள்ஜீயர் ஆய்ந்து அருளிச்செய்தது ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவம். இஃது ஏறக்குறைய அறுபது வருடங்களுக்குமுன், திருவல்லிக்கேணியிலெழுந்தருளி யிருந்த ஸ்ரீமதுபயவே. வைத்தமாநிதி. அப்பங்கார் ஸ்வாமியின் முன்னிலையில் பரிசோதித்து மிகச்சிறந்த முறையில் அச்சிடப்பட்டிருந்தது. அந்த ஸ்ரீகோசம் இருபதாண்டுகட்கு முன்னமே துர்லபமாய் விட்டது. சென்னை ஸ்ரீவைஷ்ணவக்ரந்தமுத்ராபக ஸபையார் தெலுங்கு லிபியில் வெளியிட்ட இந்த ஸ்ரீகோசமும் நெடுநாள் முன்னமே துர்லபமாயிற்று. ஆக இடையில் பலவாண்டுகள் இந்த ஸ்ரீகோசம் துர்லபமானது மிகப்பெரிய குறையாக வேயிருந்தது ஸ்ரீவைஷ்ணவவுலகுக்கு. இப்போது இக்குறை அறவே தீர்ந்தது. திருச்சி ஸமீபம் புத்தூர் அக்ரஹாரத்தில் வாழும் ஸ்ரீமதுபயவே. S. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார் M.A.B.L. அட்வகேட்; ஸ்ரீவைஷ்ணவஸுதர்சனபத்ராதிபர் நம்முடைய ஸம்பிரதாய க்ரந்தங்களை மிக்கவூக்கத்துடன் பதிப்பித்து வருபவர் இந்த ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவ ஸ்ரீகோசத்தை மிகவழகிய முறையில் பதிப்பித்து நேற்று வைகுண்ட ஏகாதசிக்கு மறுநாள் கோயில் உடையவர் ஸந்நிதியில் மாமூலாக நடந்துவரும் தென்னுசார்ய ஸம்பிரதாய ஸபையின் சார்பான வித்வத் ஸதஸ்ஸில் வெளியிட்ட செய்தியையறிந்து மிக மகிழ்கின்றோம். இன்னுருடைய பதிப்பு என்பதே போதுமன்றோ. அதிகம் தெரிவிக்கவேண்டிய அவசியமில்லையே. நவீன ப்ரக்ரியையில் செய்யவேண்டிய பரிஷ்காரமெல்லாம் செவ்வனே செய்திருப்பது குறிப்பிடத்தக்கது. ப்ரமாண ச்லோகங்களுக்கு உரை முதலானதும் மஹோபகாரகமாகச் சேர்ந்திருக்கின்றது.

விலை 7 ரூபா யென்பது அதிகமன்று. கிடைக்குமிடம். ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சன கார்யாலயம். 3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி–17. ... ...

# ஸ்ரீமதுபயவே. திருமலை. அனந்தாண்பிள்ளை அக்காரக்கனி. ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமிக்கு ஷஷ்டியப்தபூர்த்திமஹோத்ஸவம்.

அடியேனுடைய ஜ்யேஷ்ட ஜாமாதாவான இந்த ஸ்வாமிக்கு நேற்று மார்கழி மாதம் 25உ புதன்கிழமை பூர்வபல்குனீ (பூரம்) நக்ஷத்திரத்தில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் ஸ்ரீகாஞ்சியில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. முதல் நாள் அநத்யயனோசித திவ்யப்ரபந்த ஸேவையும் அருணகாடக வேதபாராயணமும் ஸ்ரீராமாயணபாராயணமும் நடைபெற்று, மறுநாள் திருப்பாவை ஸேவை சாத்துமுறையான பிறகு சுபமுஹூர்த்தத்தில் மாங்கல்யதாரணம் யதாவிதி நடந்து ஆசீர்வாத ஸமயத்தில் ஆப்தர்களின் புகழுரையுபந்யாஸங்கள் நடைபெற்றன. கீழே (பக்கம் 12ல்) ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸ்ரீமது பயவே. திருப்பாப்புலியூர் அட்வகேட் T.S. ராமாநுஜாசாரியர் ஸ்வாமி ஸகுடும்பராக எழுந்தருளியிருந்து "அபிநந்தன பஞ்சரத்னம்" என்று ஐந்து சுலோகங்களை யியற்றி கர்ண ச்ராவ்யதமமாக உபந்யாஸம் செய்தருளினர். அதன் பிறகு,



*நைமித்திகேஸ்மிந் கல்யாணே நித்யகல்யாண ஸம்பதா,
ஜாமாதுர் மம வக்ஷ்யாமி ச்ரூயதாம் ரஸிகைர் புதை:*

என்று தொடங்கி ஸதஸ்ஸில் விண்ணப்பஞ் செய்தவற்றைச் சிறிது ஸம்க்ஷேபித்து இங்கு விஜ்ஞாபிக்கின்றேன்.

ஸ்ரீ ஸ்வாமிக்கு இப்போது நடைபெறுவது நைமித்திகமானதொரு கல்யாணம். அறுபதாண்டு நிறைவாகிற வொரு நிமித்தத்தைமுன்னிட்டு நடைபெறும் கல்யாணமாகையாலே இது நைமித்திக கல்யாணம். ஏறக்குறைய நாற்பது ஸம்வத்ஸரகாலமாக வாய்த்த ஸஹயோகத்தினால் ஸ்ரீ ஸ்வாமியிடத்தில் நான் கண்டறிந்த நித்ய கல்யாண ஸம்பத்தை உள்குழைந்து உரைக்கின்றேன் கேண்மின். ஸ்ரீ பாஷ்யே ஜிஜ்ஞாஸாதிகரணே லகுஸித்தாந்தத்தின் முடிவில்—

"வாக்யகாரச் ச த்ருவாநுஸ்ம்ருதேர் விவேகாதிப்ய ஏவ நிஷ்பத்திமாஹ—*தல்லப்திர்

விவேக விமோக அப்யாஸ க்ரியா கல்யாண அநவஸாத அநுத்தர்ஷேப்ய: ஸம்பவாத் நிர்வசநாச்ச* இதி.''

என்றருளிச்செய்து அதை விவரித்துப் போருகையில்

''ஸத்ய ஆர்ஜவ தயா தாந அஹிம்ஸா அநபித்யா: கல்யாணாநி''



என்று ஆறு குணங்களை நித்ய கல்யாணமாக உதாஹரித்தருளுகிறார். மனிதர்களுக்கு அமைய வேண்டிய குணங்கள் பலவற்றினுள்ளும் மிக முக்கியமானவை, மிகச் சிறந்தவை, பக்திக்கு முக்கிய ஸாதனமானவை என்று நூற்கொள்கை. இவ்வாறு குணங்களில் ஏதேனுமொன்று இருந்தாலும் போதுமென்னும்படியாயிருக்க, ஆறும் குறையற்றிருப்பதால் ஸ்வர்ண கமலத்திற்கு ஸௌரபோந்மேஷமன்றோ. இது.



கல்யாணமென்கிற ஒரு சொல்லில் இவ்வாறு குணங்களையும் அடக்கின முன்னோர்களின் சாதுர்யத்தை என்சொல்வோம். இவ்வாறு குணங்களுக்கும் ஸ்வல்ப விவரணம் கேளீர். **ஸத்யம்** என்பது முதலது. ஸத்யமென்பதன் ஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்து உரைத்தல் அரிதென்று பெரியார்கள் கூறுகின்றார்கள். 'உள்ளதை உள்ளபடியுரைத்தல் ஸத்யம்' என்று கூறுவோமாயின் நேத்ர ரோகாதிகளான உபாதி விசேஷங்களாலே ஒன்றை வேறொன்றாக ப்ரமித்துச் சொல்லுபவனை அஸத்யவாதியென்னவேண்டிவரும்.

அங்கு ப்ரமமென்கிற தோஷம் சொல்லலாகுமேயொழிய அஸத்யவாதித்வமாகிற தோஷம் சொல்லப்போகாது. இனி, உள்ளது உள்ளபடியே சொல்லுதல் என்பதைவிட்டு 'கண்டது கண்டபடியே சொல்லுதல் ஸத்யம்' என்னலாமோவென்னில், அதுவும் ஏலாது; கண்டது கண்டபடியேசொல்லுவதனுல் பிறர்க்கு அனர்த்தம் விளைவதாயிருந்தால் *ந ப்ரூயாத் ஸத்யமப்ரியம்* *நாருந்துதஸ் ஸ்யாத் ந ந்ருசம்ஸவாதீ* இத்யாதி சாஸ்த்ர விருத்தமாகுமாதலால். பகவத்கீதையில்(10-4) *க்ஷமா ஸத்யம் தமச் சம:* என்றவிடத்தில் ஸத்யமென்பதை விவரித்தருளா நின்ற பாஷ்யகாரர் "யதா த்ருஷ்ட விஷயம் பூதஹிதரூபம் வசனம் –ஸத்யம்" என்றருளிச் செய்தார். இதில் *பூதஹிதரூபம்* என்றது உயிர் நிலையானது. கீதையிலேயே மேலே (17-15) *அநுத்வேககரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதஞ்ச யத்* என்று மூலமுள்ளது.





இனி அடுத்தது ஆர்ஜவம். ருஜுவாயிருக்குந்தன்மை ஆர்ஜவமெனப்படும். அதாவது மனோவாக்காயங்கள் [மனமொழி மெய்கள்] வெவ்வேறுபட்டிருக்கையன்றிக்கே ஒருபடிப்பட்டிருக்கை. இதற்கு எதிரிடையானகுணம் கௌடில்யமெனப்படும். மனம் செய்கை உரை ஒன்றியில்லாமை கௌடில்யமாகும். *மநஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்மநாம், மநஸ்யேகம் வசஸ்யேகம் கர்மண்யேகம் மஹாத்மநாம்* என்றதை இங்கு நினைப்பது. *கரணத்ரயஸாரூப்யம் இதி ஸௌக்யரஸாயநம்* என்றுர்

வேதாந்த தேசிகன். ஸத்யத்திற்காட்டிலுமுயர்ந்தது ஆர்ஜவமென்கிறவிது. இனி மூன்றாவது தயையென்பது. "தயா ஹி நாம ஸ்வார்த்தநிரபேக்ஷா பரது:க்காஸஹிஷ்ணுதா" என்பது ஸ்ரீ பாஷ்யஸூக்தி. பிறர் நோவுகண்டால் ஐயோவென்றிரங்குகை தயை யெனப்படும். *நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந்தேங்க* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் இரக்கமிலாதாருடைய தன்மையும் இரக்கமுடையாருடைய தன்மையும் காட்டப்பட்டது. இங்கே ஈடுமுப்பத்தாறாயிரப்படி ஸ்ரீஸூக்தி கேண்மின். "ஒருவனுக்கு ஓர் அனர்த்தம் வந்தவாறே அற்றைக்கு முன்பு வெற்றிலை தின்றறியார்களே யாகிலும் அன்றாக ஒரு வெற்றிலை தேடித்தின்பது, ஓர் உடுப்பு வாங்கியுடுப்பது, சிரிப்பதாகா நிற்பர்களாயிற்று." என்று. உலகில் மனிதர்களுக்கு ஏதேனும் ஆபத்து நேருவது ஸஹஜந்தானே; தைவகதியாய் அப்படி நேர்ந்துவிட்டால் ஐயோவென்று இரக்கங்காட்ட வேண்டியிருக்க, அது காட்டாததோடு தங்களுக்கு மஹத்தான ஸம்பத்து விளைந்தாற்போலவும் தங்கள் வீட்டில் பெரியதொரு கலியாணம் நேர்ந்தாற்போலவும் கொந்தளிப்பர்கள். பிறந்தநாள் முதல் ஒருநாளும் வெற்றிலை தின்றறியாதவன் அன்றைக்கு [அதாவது பிறர்களுக்குக் கிலேசமுண்டானவன்றைக்கு] பலரும் காண வாசல் திண்ணையிலிருந்து கால்மேல் காலிட்டுக்கொண்டு வெகு உற்சாகந்தோற்ற வெற்றிலையுண்பர்கள்; ஒருநாளும் நல்ல துணி உடுத்தறியாதவர்கள் அன்று பட்டாடைகட்டித் திரிவர்கள். ஒருநாளும் முகவிகாஸம் காட்டிச் சிரித்தறியாதவர்கள் அன்றாக அட்டஹாஸம் செய்வர்கள். இதுவாயிற்று மேலெடுத்த ஈட்டு ஸ்ரீஸூக்தியின் விநோதக் கருத்து. இப்படியன்றிக்கே ஸ்வகீயர்களோடு பரகீயர்களோடு வாசியற யார்க்கு என்ன கஷ்டம் நேர்ந்தாலும் ஐயோவென்று தானும் வருந்தியிருக்கை தயையெனப்படும். *வ்யஸநேஷு மநுஷ்யாணாம் ப்ருசம் பவதி து:க்கித:* என்னும்படி சக்ரவர்த்தி திருமகனார் காட்டின மஹாகுணமிது. இனி தானமாவது என்னவென்றால், பகவத்கீதையில் (10-5) *தபோ தாநம் யசோயச:* என்றவிடத்து பாஷ்யத்தில் "தாநம—ஸ்வகீய போக்யாநாம் பரஸ்மை ப்ரதிபாதநம்" என்றும், (16-1) *தாநம் தமச்ச யஜ்ஞச் ச* என்றவிடத்தில் "தாநம்—ந்யாயார்ஜித தநஸ்ய பாத்ரே ப்ரதிபாதனம்" என்றும் ஸ்வாமியருளிச் செய்தது. ஸ்ரீஹர்ஷகவி நைஷதகாவ்யத்தில் (5-17) *பூர்வபுண்ய விபவவ்யயலப்தாஸ் ஸம்பதோ விபத ஏவ விம்ருஷ்டா:, பாத்ரபாணி கமலார்ப்பணமாஸாம் தாஸு சாந்திகவிதிர் விதித்ருஷ்ட:* என்று சிறிது விலக்ஷணமாகக்



கூறினுன்; அதாவது, முன்னே நல்வினைப்பயனுகக் கிடைத்த ஸம்பத்துக்கள், ஆராய்ந்து பார்க்குமிடத்து விபத்துக்களென்றே கொள்ளத்தகும்; அவற்றை ஸத்பாத்ரங்களில் விநியோகிப்பதே விபத்பரிஹாரமாகுமென்றபடி. ஆக, போக்யமாயும் ந்யாயார்ஜிதமாயுமுள்ள பொருளைப் பிறர்க்கு விநியோகிப்பது தானமென்றதாயிற்று. ஆசார்யஹ்ருதய வியாக்கியானத்தில் (99) "தானமாவது—லோபராஹித்யம்' என்பது மணவாளமாமுனிகள் அருளிச்செயல். பிறர் பொருளில் ஆசை கொள்ளாமலிருந்தால் அதுவே சிறந்த தானம் என்று பொருள் கூறுவர். அன்றிக்கே, க்ருபணனுகை இல்லாமை தானம் என்னவுமாம்.



இனி அஹிம்ஸையாவது மனோவாக் காயங்களொன்றினுலும் பிறர்க்குப் பீடையை விளைக்காமலிருப்பதாம். பிறரை நலியவேணுமென்று நினைக்கை மாநஸபீடை; வாக்கினுலே நிந்திக்கை வாசிகபீடை; கைகால்களாலே ப்ரஹரிக்கை காயிகபீடை; இவையொன்றுமில்லாமலிருக்கை அஹிம்ஸையெனப்படும். இனி ஆருவது 'கல்யாணம் **அநபித்யா** என்பது. முன்னம் அபித்யா என்பது இன்னதென்று தெரிந்துகொள்ள வேணும். இதன் பொருளை மூன்றுவிதமாகவருளிச் செய்கிருர் மணவாள மாமுனிகள்—"பரகீயே ஸ்வபுத்தி:, நிஷ்ப்பலசிந்தா, பரக்ருதாபகாரசிந்தா அபித்யா" என்று. (விவரணம்) பிறர் பொருளைத் தன்னதாக நினைத்தல்; ப்ரதிகாரமில்லாத வீணுன சிந்தை, நமக்குப் பிறர்செய்த அபகாரத்தை அன்றே மறக்கவேண்டியிருக்க அதைப் பற்றிச் சிந்தித்துக்கொண்டிருத்தல்— ஆகிய இவையில்லாமை அநபித்யை யென்றதாயிற்று. ஆக இவ்வாறு வகையான கல்யாணமும் நைமித்திககல்யாண பாத்ரபூதரான ஜாமாதாவிடத்திலே குறையற்றிருக்கிறபடியைக் கூறி முடித்தேன். பிறகு ஆசீர்வாத ஸம்பாவநா கோஷ்டிகள் செவ்வனே நடைபெற்றன. ... ... ... ❋

## முதல் நாள் 7—1—69 இரவு ஸங்கீதக் கச்சேரி நடந்த வரலாறு.

சென்னை ஹைகோர்ட் ஜட்ஜாக இருந்தவரும், ஸ்ரீபெரும்பூதூர் தேவஸ்தானத்தில் நெடுநாள் தர்மகர்த்ரு பதவியை வஹித்திருந்தவருமான ஸ்ரீஉவே. வி. பாஷ்யமையங்கார் ஸ்வாமியின் த்ருதீய குமாரரான ஸ்ரீமான் V. C. பத்மநாபையங்காருடைய மனைவி ஸ்ரீமதி கல்யாணியம்மா ஸங்கீத கலையில் மட்டுமன்றிக்கே ஸாஹித்யகலை, ஸம்ப்ரதாயகலை முதலானவற்றிலும் நிபுணை. சில மாதங்களுக்குமுன் இந்த அம்மைக்கு **மதுரபாஷிணி** யென்று நாம் விருதளித்ததை ஸ்ரீ ராமாநுஜனில் வாசித்திருப்பீர்கள். இந்த ஷஷ்ட்யப்த

பூர்த்தி மஹோத்ஸவத்தில் ஒருவேளை பாட்டுக்கச்சேரி நடத்தவேணுமென்று தானாகவே விருப்பங்கொண்ட இவ்வம்மை பக்கவாத்யபரிகரங்களுடன் முதல்நாள் வந்திருந்து இரவு 8 மணிமுதல் 10 மணிவரையில் அனேக ச்லோகங்களையும் பல பாசுரங்களையும் *கேட்டு ஆரார் வானவர்கள் செவிக்கினிய செஞ்சொல்லே* என்னும்படியாகப் பாடி மிகப்பெரிய விருந்தளித்தது பரமபோக்யமாயிருந்தது. கணவனான ஸ்ரீமான் பத்மநாபனும் நம்மிடம் கொண்டிருந்த அன்புமிகுதியினால் விஜயஞ்செய்திருந்தது குறிப்பிடத்தக்கது. ஸங்கீதக் கச்சேரிக் குழுவினர் ஒருவரும் ஸன்மானம் விரும்பாமல் ஸ்வயம்ப்ரயோஜனமாகக் கச்சேரி நடத்தினபடியால் பத்மநாப நண்பனுக்கு மட்டுமே பீதாம்பரப் பரிசளிக்கலாயிற்று. கச்சேரியின் முடிவில் ஸ்ரீ கல்யாணியம்மையின் வாக்குத் தூய்மையைப் பற்றி நாம் உள்கனிந்து சில பேச்சுக்கள் பேசினவுடன் அவ்வம்மை நின்று பேசின பேச்சுக்கள் வித்வான்களையும் வியக்கச் செய்தன. *கோவைவாயாள் பொருட்டு* என்னுந்திருவாய்மொழிப் பாசுரத்தை ஒரு வியாஜமாகக் கொண்டு பொழிந்த சொல்லமுதங்கள் *சொலப்புகில் வாயமுதம்பரக்கும். இப்பாசுரத்தில் நப்பின்னைக்காக ஏற்றின்னெருத்தமிறுத்தது, மதிளிலங்கைக் கோவைவீயச்சிலை குனித்தது, யானைமருப்பொசித்தது ஆகிய மூன்று பகவச் சரித்திரங்களை ஆழ்வார் அநுபவித்ததை அபதேசமாகக்கொண்டு மூன்று மூன்று விஷயங்களாக எடுத்து அடுக்கிப் பேசினவை எங்குங் கேட்டறியாதவை. அவற்றில் நினைவுக்குவரும் சிலவற்றையே இங்கு எழுதுகின்றேன். 1. தத்வம் ஹிதம் புருஷார்த்தம். 2. சித்து அசித்து ஈச்வரன். 3. வேதம் இதிகாசம் அருளிச்செயல். 4. பரத்வம் அவதாரம் அர்ச்சை. 5. மானஸம் வாசிகம் காயிகம். 6. கர்மம் ஞானம் பக்தி—ஜனகர் ஜடபரதர், ப்ரஹ்லாதன். 7. பூ: புவ: ஸுவ:. 8. திருமந்த்ரம் த்வயம் சரமச்லோகம். 9. வதரி, விஷ்ணுலோகம் திருத்தேர்த்தட்டு. 10 தாரகம் போஷகம் போக்யம்—உண்ணுஞ்சோறு பருகும்நீர் தின்னும் வெற்றிலை. 11. ஸ்வரூபம் உபாயம் உபேயம். 12. பராங்குசர் பரகாலர் யதிவரர். 13. ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர். 14. ஆண்டாள் மதுரகவி எதிராசன். 15. பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர். 16. நின்றவாறு இருந்தவாறு கிடந்தவாறு—ஊரகம் பாடகம் வெஃகணை = ஸ்ரீவைகுண்டம் வரகுணமங்கை திருப்புளிங்குடி. 17. அநந்யார்ஹ சேஷத்வம் அநந்யசரணத்வம் அநந்யபோக்யத்வம். 18. முமுக்ஷுக்கள் முக்தர் நித்யர். 19. மடிதடவாதசோறு சுருநாறுதபூ சுண்ணும்புபடாதசாந்து—விதுரர் மாலாகாரர் கூனி.



இப்படியாகப் பேசின மூன்றடுக்குகள் நூறடுக்குகளாக முடிந்தவதிசயம் அதிசயமேயாகும். இவ்வம்மைக்கு மதுரபாஷிணியென்று ஏற்கெனவே அளித்திருந்த விருதை அதிமதுரபாஷிணியென்று சிறப்பித்து முடிவுரை கூறி முடிக்கலாயிற்று. ...

நித்யஸ்ரீர் நித்யமங்களம்.

# திருப்பாவைக்கு ஏற்ற அலங்காரம் எது?

காவ்யரஸிகர்களுக்கு அலங்கார சாஸ்த்ரம் ஜீவ நாடியாகவுள்ளது. அழகு பெறுத்துவது அழங்காரமெனப்படும். சப்தாலங்காரமென்றும் அர்த்தாலங்கார மென்றும் இருவகைப்பட்டவிதில் சப்தாலங்காரத்திற் காட்டிலும் அர்த்தாலங் காரம் மேம்பட்டது. வடமொழியில் அலங்கார மென்பது தென் மொழியில் அணி யெனப்படும். சொல்லணி பொருளணி யென்கிற பாகுபாடு அதிலுமுண்டு. ப்ராஸம் முதலானவற்ருல் சொற்களுக்கு அழகையுண்டாக்குவது சொல்லணி. இப்போது நாம் பொருளணியில் ஏகதேசம் ஆராய்ச்சி செய்ய இழிகின்ருேம். "இத்தம் சதமலங்காரா:" என்றபடி நூறு வகையாகவுள்ள அர்த்தாலங்காரங்களில் ஸமாஸோக்தி, அப்ரஸ்துத ப்ரசம்ஸை, ப்ரஸ்துதாங்குரம் என்கிற மூன்று அலங் காரங்களைப் பற்றி முன்னம் பேசுகிருேம்.

## ஸமாஸோக்தியலங்காரம்

"ஸமாஸோக்தி: பரிஸ்பூர்த்தி: ப்ரஸ்துதே அப்ரஸ்துதஸ்ய சேத்" என்பது ஸமாஸோக்தியலங்காரத்தின் லக்ஷணம். கவி ப்ரக்ருதமான வொரு செய்தியைக் குறித்துப் பேசுகையில் சொற் செறிவால் அப்ரக்ருதமான ஒரு செய்தியும் தோன்ற நின்ருல் அங்கு ஸமாஸோக்தியலங்காரமாகும். "முன்பு ஒருபுறம் மேடா யிருந்த இடமெல்லாம் இப்போது பள்ளமாயிற்று; மற்றொருபுறம் பள்ளமாயிருந்த விடமெல்லாம் மேடாயிற்று" என்கிருனொருவன். இவ்விஷயம் அவனுக்கு ப்ரக்ருதம்; இதிலிருந்து அப்ரக்ருதமான வொரு விஷயம் தோன்றுவது காண லாம்; அதாவது, 'தனிகனுயிருந்தவன் தரித்ரனுகிருன்; தரித்ரனுயிருந்தவன் தனிகனுகிருன்' என்று. ஆகவே இங்கு ஸமாஸோக்தியலங்காரம்.

## அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரம்

"அப்ரஸ்துதப்ரசம்ஸா ஸ்யாத் ஸா யத்ர ப்ரஸ்துதாச்ரயா" என்பது இவ் வலங்காரத்தின் லக்ஷணம். ப்ரக்ருதமான வொரு செய்தியைத் தோற்றுவிப்பதற் காகவே அப்ரக்ருதமான வொரு செய்தியைக் கவி வருணிப்பது அப்ரஸ்துத ப்ரசம்ஸாலங்காரமாகும். 'பறவைகளில் மழைத் தெய்வத்தையன்றி மற்றெவரை யும் எதிர்பாராத சாதகபக்ஷிதான் சிறந்தது' என்ருன் ஒரு கவி. அவனுக்கு இவ் விஷயம் விவக்ஷிதமன்று; 'எம்பெருமானிடத்திலன்றி மற்றெவரிடத்திலும் பல்லைக் காட்டாத பரமைகாந்தியே சிறந்தவன்' என்பதைச் சொல்லவிரும்பி, * ப்ரபந்நே சாதகந்யாய: * என்ற மூதுரையை மனத்திற்கொண்டு அப்ரக்ருதமான சாதக பக்ஷிப்ரசம்ஸையைச் செய்தான் கவி. ஆகவே இங்கு அப்ரஸ்துதப்ரசம்ஸை.

## ப்ரஸ்துதாங்குராலங்காரம்.

இனி ப்ரஸ்துதாங்குரமென்னுமலங்காரத்தைப்பற்றிக் கேண்மின்; இதைப் பற்றின விமர்சத்தை முக்கியமாகக் கொண்டே இக்கட்டுரை யெழுதத் தொடங்கலாயிற்று. ''ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர:'' என்று இவ்வலங்காரத்திற்கு லக்ஷணம் கூறப்பட்டுள்ளது. கவி வருணிப்பதும் ப்ரக்ருதமான செய்தி; அதிலிருந்து தோற்றுகின்றவொரு செய்தியும் ப்ரக்ருதமானது; இப்படிப்பட்டவிடத்தில் ப்ரஸ்துதாங்குராலங்காரமாம். இதற்கு சந்த்ராலோகத்தில் காட்டியுள்ள உதாரணம் யாதெனில்; *கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத்யாம் கேதக்யா கண்டகேத்தயா* என்பது. இது வண்டை நோக்கி ஒரு காமினி சொல்லுவது. 'வண்டே! நல்ல மாலதீபுஷ்பமிருக்க முள் நிறைந்த தாழையை ஏன் விரும்புகிறாய்?' என்பது இதன் பொருள். இதில் வாச்யார்த்தத்திற்குமேல் வ்யங்க்யார்த்தமொன்று கண்டறியவேணும். வாச்யார்த்தம் தெரிந்ததே. வ்யங்க்யார்த்தம்—அபாயமற்ற மனைவியிருக்க அவளைவிட்டு அபாயம் மிக்க வேற்று மாதரிடத்தில் விருப்பங் கொண்ட கணவனை நோக்கிக் காதலி சொல்லுவதாம். ஆக இவ்விரண்டு பொருளும் ப்ரக்ருதமே யென்றும், 'ஒன்று ப்ரக்ருதம், மற்றொன்று அப்ரக்ருதம்' என்பது கிடையாதென்றும் கொள்ளப்படுகிறது.

குவலயானந்தகாரரான அப்பயதீக்ஷிதர் இங்கு எழுதுவது என்னவென்றால், தன் கணவனோடுகூட உத்யானவனத்திற்குச்சென்ற காதலியொருத்தி அங்கு வண்டைக் கண்டு இங்ஙனே சொன்னாளாதலால் இது ப்ரக்ருதமானதே; இதிலிருந்து வ்யங்க்யமானது பரநாயிகாஸக்த ஸ்வகீயநாயக சிக்ஷணம்; அதுவும் ப்ரக்ருதமானதே என்று உடனே அவர் தாமே ஒரு சங்கையைக் கிளப்பி ஸமாதானமு மெழுதியுள்ளார்; (அதாவது) அஃறிணையானவண்டை நோக்கிச் சொல்லுவதென்பது பொருந்தாதாகையாலே இங்கு வாச்யார்த்தம் ப்ரக்ருதமாக இருக்க முடியாதேயென்று சங்கித்து, இங்ஙனே பலவிடங்களில் காண்கிறோமென்று, மரத்தைநோக்கி ஒருவன்சொன்னதும், அதற்கு மரம் விடைகூறினதுமான ச்லோகமொன்றை யெடுத்துக்காட்டி ஸமாதானம் பண்ணியிருக்கிறார்

சந்த்ராலோககாரர் காட்டின ''கிம் ப்ருங்க! ஸத்யாம் மாலத்யாம்'' என்கிற உதாஹரணத்தில் வண்டை விளித்துச் சொல்லுவதுமட்டுமேயுள்ளது. தீக்ஷிதர் காட்டியுள்ள "கஸ் த்வம் போ: கதயாமி" என்கிற சுலோகத்தில் மரத்தை விளித்து வினவுவதும், வினவப்பட்ட மரம் விடை கூறுவதுமான அமைப்பு உள்ளதனால் இந்த வினாவிடைகள் அஸம்பாவிதமென்பதும் அசைக்க முடியாததாம். ஸுபாஷிதரத்ந பாண்டாகாரத்தில் அந்யாபதேசச்லோகங்களை ஆயிரக் கணக்காகக் காண்கிறோம்—மேகாந்யோக்தி, ப்ரமராந்யோக்தி:, வ்ருக்ஷாந்யோக்தி:, ம்ருகாந்யோக்தி: என்று மகுடங்கொண்ட சுலோகங்களெல்லாம் பெரும்பாலும் அப்ரஸ்துதப்ரசம்ஸாலங்காரத்திற்கு லக்ஷ்யமாகக் கூடியவையேயாகும். ''ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர:" என்ற லக்ஷணத்திற்குச்சேர ஆலங்காரிகர் காட்டின ஸமஞ்ஜஸமான லக்ஷ்யம் ஒன்றுகூட நாம் கண்டிலோம். திருப்பாவை முழுவதும் இவ்வலங்காரத்திற்கு லக்ஷ்யமென்று உபபாதிப்பவனடியேன்.

## —முத்ராலங்காரமென்றும் ஒன்றுண்டு—

*ஸூசயார்த்த ஸூசநம் முத்ரா ப்ரக்ருதார்த்தபரை: பதை: * என்பது அதன் லக்ஷணம். சிலசில பதங்களையிட்டு கவி ஸூசிப்பிக்க நினைத்த (வேறு) அர்த்தத்தை ஸூசிப்பித்தல் முத்ராலங்காரமென்றபடி. ஒருவரை ஸ்துதிசெய்துகொண்டு போகையில் நக்ஷத்ரத்தையோ ஸம்வத்ஸரத்தையோ வ்ருத்தத்தையோ ஸூசிப்பிக்க விரும்பி அதற்கு அநுகுணமான பதத்தையோ பதங்களையோ ப்ரயோகிப்பர்கள் கவிகள்; அங்கு முத்ராலங்காரமாகும். திருப்பாவையில் இவ்வலங்காரமும் பலவிடங்களில் நன்கு தோன்ற நின்றது. திருப்பாவைக்கு அடியேனெழுதி வெளியிட்டுள்ள ஐந்தாறு வியாக்கியானங்களில் இதெல்லாம் விளங்கக் காணலாம். ஆயினும் வழிகாட்டிவிடாமல் இங்கும் சுருக்கமாகத் தெரிவிக்கலாகிறது.

## —நீராட்டத்தின் மருமம்—

திருப்பாவையில் முதற்பாட்டில் * நீராடப்போதுவீர் போதுமினோ * என்றழைக்கப்படுகிறது. மூன்றாம்பாட்டில் * நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால் * என்றும், நாலாம்பாட்டில் * நாங்களும் மார்கழி நீராட மகிழ்ந்து * என்றும், இருபதாம்பாட்டில் * இப்போதே யெம்மை நீராட்டு * என்றும், இருபத்தாறும் பாட்டில் * மார்கழி நீராடுவான்* என்றும் இங்ஙனே பலவிடங்களில் நீராட்டம் ப்ரஸ்தாவிக்கப்படுகிறது. ஆய்ச்சிகள் நீராடுமிடமான நீர்நிலைக்குச் சென்றார்களென்று கண்டிலோம். வ்யாக்யாதாக்களான பெரியவாச்சான்பிள்ளை முதலான பூர்வாசாரியர்கள் "நீராடவென்னுமித்தால் இவர்கள் நினைக்கிறது க்ருஷ்ணஸம்ச்லேஷம். தமிழரும் கலவியைச் சுனையாட லென்றார்கள். * ஏஷ ப்ரஹ்ம ப்ரவிஷ்டோஸ்மி க்ரீஷ்மே சீதமிவ ஹ்ரதம்* ... என்றும் சொல்லிற்றிறே" என்றருளினர். இதுவன்றியும், ஆண்டாள் தன்னை நிர்தேசிக்குமிடங்களிலெல்லாம் * பட்டர்பிரான் கோதை * என்றும் * புதுவையர்கோன் விட்டுசித்தன்கோதை * என்றும் தனக்கு ஆசார்யஸம்பந்தத்தை நிரூபகமாக்கியே நிர்தேசித்தவளாகையாலே தான் ஆசார்யாபிமானத்தில் படிந்தவளென்பதைப் பாசுரந்தோறும் காட்டியிருப்பதுங்காண்கிறோம். நீராட என்னும் ஸ்ரீஸூக்தியாலே *கரசரண ஸரோஜே காந்திமந்நேத்ரமீநே ச்ரமமுஷி புஜவீசிவ்யாகுலே அகாதமார்க்கே ஹரிஸரஸி விகாஹனம் தெரிவிக்கப்படுவதுபோல, (திருவிருத்தத்தில்) * காலை நன்ஞானத்துறை படிந்தாடிக் கண்போது செய்து* என்று ஆழ்வாரருளிச்செய்தபடியே ஞானத்துறையான ஸதாசார்யத்துறையில் படிந்து குடைந்தாடுவதும் தெரிவிக்கப்படுகிறது. அதற்கும் அநுகுணமாகவேயன்றோ பதப்ரயோகங்கள் அற்புதமாக அமைந்துள்ளன. வாய்திறக்கும்போதே மார்கழி யென்று தொடங்கின ஆண்டாளின் உட்கருத்தை உய்த்துணரவேணும்

## —மார்கழியென்கிற சொல்லின் மருமம்—

மார்கழி என்கிற இது மார்க்க சீர்ஷ மென்ற வடசொல்லின் விகாரம். மிருக சீர்ஷ நக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணமாஸியுள்ள மாதம் மார்க்கசீர்ஷ மாஸம் என்றபடி. மாஸப்பெயர்கள் ஸௌரமாநரீதியிலும் சாந்த்ரமாநரீதியிலும் வழங்கப்படுகின்றன. மேஷம் விருஷபம் மிதுநம் இத்யாதி வ்யபதேசங்கள் ஸௌரமாநரீதி. சைத்ரம் வைசாகம் ஜ்யேஷ்டம் இத்யாதி வ்யபதேசங்கள்

சாந்த்ரமாநரீதி. சித்திரை வைகாசி இத்யாதிகளான தமிழ் வழக்குக்களும் சாந்த்ர மாநஸம்ஜ்ஞையையே அநுஸரித்தவை; சித்ரா நக்ஷத்ரமும் பௌர்ணமாஸியும் ஒன்று கூடினால் சைத்ரம்; விசாகா நக்ஷத்ரமும் பௌர்ணமியும் ஒன்று கூடினால் வைசாகம். மேல் ஒவ்வொன்றையும் இப்படியே பார்த்துக் கொள்வது. இவ்வகையில், மிருகசீர்ஷ நக்ஷத்ரமும் பௌர்ணமியும் ஒன்று கூடினால் மார்க்கசீர்ஷமெனப் படுகிறது. நக்ஷத்ரதிதிகளின் வ்ருத்தி ஹ்ராஸங்களுக்கு ஏற்ப [நாழிகையேறுதல் குறைதல்களுக்குத் தகுதியாக] முன் நக்ஷத்ரமோ பின் நக்ஷத்ரமோ (பௌர்ணமியோடு) கூடுதலுமுண்டு. அதைப்பற்றிச் சிந்தை வேண்டா. மார்க்கசீர்ஷமென்ற வட சொல்லின் பொருளிலேயே மார்கழி யென்ற தமிழ்ச்சொல் போந்ததென்று நிருபிக்கப்பட்டதாயிற்று. இப்பொருள் தவிர மற்றொரு பொருளும் மார்க்கசீர்ஷமென்னுஞ் சொல்லுக்கு ஸம்பாவிதமே. அதாவது, (மார்க்க-சீர்ஷ) என்று இரண்டு சொல்வடிவங்களாகக் கொண்டு மார்க்கங்களில் தலையானது என்று கொள்வது. சீர்ஷமென்று தலைக்குப் பெயர். மார்க்கமென்றது உபாய மென்றபடி, உபாயங்களில் தலையானது என்றதாயிற்று. கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்திகளுக்கும்மேலே ஆசார்யாபிமானம் என்பது தலையான உபாயமாயிருக்கும். அதுதான் மார்க்க சீர்ஷமென்கிறது. மார்கழி யென்பது மதுவே.

## —ஆண்டாளுடைய நிஷ்டையின் நிருபணம்—

ஆண்டாள் நாச்சியார் திருமொழியில் உபாயங்களில் தலையானதை இரண்டு பாசுரங்களினால் நன்கு காட்டியுள்ளாள்: *சொல்லை யரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார் சொல்லும் பொய்யானால், நானும் பிறந்தமை பொய்யன்றே* என்பது ஒரு பாசுரம். *நல்லவென் தோழி! நாகணைமிசை நம்பரர், செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம் செய்வதென்? வில்லிபுதுவை விட்டுசித்தர் தங்கள் தேவரை, வல்லபரிசு வருவிப்பரேல் அது காண்டுமே* என்பது மற்றொரு பாசுரம். இவ்விரண்டு பாசுரங்களினாலும் ஆண்டாள் தனக்கு ஆசாரியன் வழியாகவே பேறு என்னுமிடத்தை அறுதியிட்டிருக்கின்றாள். கொல்லையரக்கியை மூக்கரிந்திட்ட குமரனார்-சக்ரவர்த்தி திருமகனார்; அவருடைய சொல்லாவது *நத்யஜேயம் கதஞ்சந* இத்யாதிகள்; அவை பொய்யானாலுங் கூட, [நானும் பிறந்தமை பொய்யன்றே] நான் பெரியாழ்வார் வயிற்றிற் பிறந்தது பொய்யன்றே, எனக்குண்டான ஆசார்யஸம்பந்தம் பழுதாய் விடுமோ? ஒருகாலுமாகாது என்றபடி. இனி, "வில்லிபுதுவைவிட்டுசித்தர் தங்கள் தேவரை வல்ல பரிசு வருவிப்பரேல் அது காண்டுமே" என்ற பாசுரம் ஸ்ரீவசநபூஷணத்தின் முடிவில் ஆசார்யநிஷ்டைக்குச் சார்பாக உதாஹரிக்கப் பட்டுள்ளது. அங்கு மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் ஸேவிப்பது ஆகவிப்படி ஆண்டாள் கடைப்பிடித்த சரமோபாயத்தையே திருப்பாவையில் உயிர்நிலையான பொருளாக வைத்துப் பேசுகிறாள். அதற்கு ஸூசகம் மார்க்க-சீர்ஷ பதபர்யாயமான மார்கழி என்னும் முதற்சொல்.

## —மார்க்க-சீர்ஷ என்று பிரிப்பதன் பொருத்தம்—

வாஸுதேவ சப்தத்திற்கு தத்தித வ்ருத்தியாலே வஸுதேவாத்மஜனென்னும் பொருள் தேறியிருக்கவும் பட்டர் வாஸு:, தேவ: என்கிற பதங்களுக்கு ஸமாஸமாகவுங் கொண்டு பாஷ்யமிட்டதுபோல, இங்கும், மார்க்க—சீர்ஷ என்கிற பதங்களுக்கு ஸமாஸமாகக் கொள்வதில் குறையொன்றுமில்லை யென்க.

வாஸு தேவபதத்தை வாஸு வென்றும் தேவனென்றும் பிரித்தது பட்டர் பாஷ்யத்தில் மட்டுமே காண்பதன்று; வாஸு தேவநாமம் வ்யாபகமந்த்ரங்களில் ஒன்ருன த்வாதசாக்ஷரியின் உள்ளீடாகையாலே பதத்வயமாகப் பிரிப்பது மந்த்ர சாஸ்த்ர ஸித்தமுமென்பது உணரத்தக்கது.

நீராட என்பது பகவத்ஸம்ச்லேஷத்தைச் சொல்லுகிறதென்று பூருவர்கள் வியாக்கியானம் செய்தருளினுலும் நீராட்டமென்பதும் ப்ரக்ருதார்த்தமேயாகும். நாச்சியாருக்கு நீராட்ட மஹோத்ஸவம் திவ்யதேசங்கள்தோறும் தொன்று தொட்டு நிகழ்ந்துவருகையாலே அதுபற்றிய சப்த விந்யாஸங்களும் ப்ரக்ருதார்த்தமே யொழிய அப்ரக்ருதார்த்தமாகாது. ஆக, தெள்ளியபொருளும் தோன்றும் பொருளுமாகிய எல்லாம் ப்ரஸ்துதமே யாகையாலே * ப்ரஸ்துதேந ப்ரஸ்துதஸ்ய த்யோதநே ப்ரஸ்துதாங்குர: * என்னும் லக்ஷணத்திற்குத் திருப்பாவைபோன்ற லக்ஷ்யம் வேறுகிடைப்பரிது என்னலாம்.

## —ஆசார்யபரமான பொருளின்பொருத்தம்—

* நாராயணனே நமக்கே பறைதருவான் * என்று ஸ்பஷ்டமான சொல்லை யிட்டுத் தொடங்கி *வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை * என்று ஸ்பஷ்டமான சொற்களையிட்டுத் தலைக்கட்டியிருக்க, ஆசார்யபரமான அர்த்தத்தை எப்படி ஏறிடக்கூடும்! என்று திகைக்கவேண்டா; * ஸாக்ஷாந் நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும், மக்நாந் உத்தரதே லோகாந் காருண்யாத் சாஸ்த்ர பாணிநா * என்றும், * பீதகவாடைப்பிரானுர் பிரமகுருவாகி வந்து * என்றும், *சேமங் குருகையோ செய்ய திருப்பாற்கடலோ, நாமம் பராங்குசமோ நாரணமோ? —தாமம் துளவோ வகுளமோ தோளிரண்டோ நான்குமுளவோ பெருமானுனக்கு?* என்றும் இங்ஙனேயுள்ள பல பிரமாணங்களை யநுஸந்தித்தால் ஏறிட்டுரைக்கும் கிலேசம் சிறிதுமில்லையென்றுணரலாம்.

*வங்கக் கடல்கடைந்த வென்கிற உபஸம்ஹாரத்திற்கும் கேளீர். [வங்கக் கடல் கடைந்த] ச்ருதிஸாகரமும் த்ராவிட வேதஸாகரமுமாகிற கடல்களைக் கடைந்தவர் ஆசாரியர். இங்கே *மறைப்பாற் கடலைத் திருநாவின் மந்தரத்தால் கடைந்து, துறைப்பால்படுத்தித் தமிழாயிரத்தின் சுவையமிழ்தம், கறைப் பாம்பணைப் பள்ளியான் அன்பரீட்டங் களித்தருந்த நிறைப்பான் கழலன்றிச் சன்ம விடாய்க்கு நிழலில்லையே* என்ற பிள்ளைப்பெருமாள் பாசுரமுணரத்தக்கது. [மாதவனை] மஹாதபஸ்வி யென்றபடி. [கேசவனை] குதிரை வடிவங் கொண்டுவந்த கேசியென்னு மஸுரனொருவனைக் கொன்று கண்ணன் கேசவனுயினன். இந்திரியங்களாகிற பல குதிரைகளை நிரஸித்து ஆசாரியர் இத்திருநாமம் பெறுவர். ஜிதேந்த்ரியரென்கை. இப்படிப்பட்ட ஆசார்யரைப் பணிந்தவர்கள் யாரென்னில்; [திங்கள் திருமுகத்துச் சேயிழையார்] ஆசார்ய ஸந்நிதானத்திலிருந்து க்ரஹிக்கப்பட்ட தாபஹரங்களான அர்த்தங்களினுல் ஸௌம்யமான திருமுகமண்டலத்தை யுடையவர்களாய் ஆத்ம குணங்களாகிற பூஷணங்களாலே பூஷிதராகப் பெற்றவர்கள். கோபிகள் கண்ணனிடத்திலே பேறுபெற்றுப்போலே சிஷ்யர்கள் ஆசார்ய ஸந்நிதியிலே பேறு பெற்றுர்களென்க. ஆக இவை ஸ்தாலீபுலாகந்யாயேந தெரிவித்தவத்தனை. * வேதமனைத்துக்கும் வித்தாகுங் கோதை தமிழ் ஐயைந்து

மைந்து மறியாத மானிடரை வையஞ்சுமப்பதும் வம்பு* என்று துணிந்து கூறும் படியான பெருமைவாய்ந்த திருப்பாவையில் தோண்டத் தோண்டச் சுரக்கும் பொருள்கள் அபரிமிதமாகத் திகழ்வதுபற்றியே எம்பெருமானார் திருப்பாவை ஜீயர் என்று பரஸித்தியுண்டாம்படி இதிலே யீடுபட்டார். * நாயகனாய் பாசுரத்தில் ஒவ்வொரு சொல்லும் முத்ராலங்காரரீதியில் எம்பெருமானாரை நிஸ்ஸந்தேஹமாக நினைவூட்டுமது. அதை இதோவிவரிக்கப்போகிறேன். அற்பமதிகளான நாமே இதை அறியும்போது ஸர்வஜ்ஞரான எம்பெருமானார் இதை அறியாதிருக்க ப்ரஸக்தியில்லை, அறிந்துவைத்தும் தம்பெருமையைத் தாமே பேசக்கூசி அறியாதவர் போலவே யிருந்திருப்பர் இந்த விஷயத்தில் நாம் பாக்யசாலிகளென்று உகக்கலாமன்றோ. நாம் அநுஸந்திக்கும் பொருள் பொருந்துகின்றதா இல்லையா? என்று ஆராய்ந்து பாருங்கள்.

## நாயகனாயும்—எம்பெருமானாரும்

[நாயகனாய் நின்ற] ஆசார்ய கோஷ்டியில் நடுநாயகமாக நிற்பவர் எம்பெருமானார் என்று காட்டுகிறபடி. "அமுநா தபநாதிசாயி பூம்நா யதிராஜேந நிபத்த நாயகஸ்ரீ:?" என்ற யதிராஜ ஸப்ததிஸூக்தியும் காண்க. [நந்தகோபன்.] எம்பெருமானைப் புத்திரனாகப் பெற்றவிஷயத்தில் எம்பெருமானார்க்கு நந்தகோபனோடு ஸாதர்மியம். யதிராஜ ஸம்பத்குமாரனென வழங்கப்படுகிற செல்வப்பிள்ளையை க்ருஷ்ணகிசோர ஸ்தானீயனாகக் கொள்க. [உடைய] ஸ்வாமிக்கு உடையவரென்று வழங்குந் திருநாமத்தை ஸூசிப்பித்தபடி. [கோயில்காப்பான்] கோயிலென்கிற சொல் திருவரங்கம் பெரிய கோயிலை மட்டும் சொல்லுவதாகவுங் கொள்ளலாம்; மற்றும் பல கோவில்களையும் சொல்லுவதாகவுங் கொள்ளலாம். * தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்திவைத்தான் வாழியே* என்றும் * ஸ்ரீமந் ஸ்ரீரங்கச்ரிய மநுபத்ரவாம் அநுதிநம் ஸம்வர்த்தய* என்றும் சொல்லுகிறபடியே திருவரங்கச் செல்வத்தைக் காத்தருளினவரென்கை *மன்னிய தென்னரங்காபுரி மாமலைமற்று முவந்திடுநாள் * என்கிறபடியே ஸகல திவ்ய தேசங்களையும் உத்தரிப்பித்தவர் ஸ்வாமியே யாதலால் கோயில்களைக் காத்தருளினவரென்பதும் பொருத்தமே. [கொடித்தோன்றுந் தோரண வாசல் காப்பானே!] * கொடியணி நெடுமதிள் கோபுரம் குறுகினர் * என்றும் * நெடுவரைத் தோரணம் நிறைத்தெங்குந் தொழுதனருலகே * என்றும் சொல்லுகிறபடியே கொடியும் தோரணமுமான வாசல்-பரமபதவாசல்; அதுதன்னையும் ஸ்வாமியெம்பெருமானார் தம்முடைய ஆளுகையிலே வைத்துக் கொண்டிருப்பவரென்கை. எம்பெருமானார் திருவருளைப் பெருதவர்களுக்கு அந்த வாசலிற் புகுவது அரிது என்கிற ப்ரஸித்தியைக் காட்டினபடி. [மணிக்கதவம் தாள் திறவாய்] மணியாவது ரத்னம். நவரத்னமென்று சொல்லப்படுவதனால் ஒன்பது ரத்தனங்கள் என்று ப்ரஸித்தம். நவரத்னம் போன்ற ஒன்பது திவ்யக்ரந்தங்களை ஸ்வாமிபணித்தருளினார். ஸ்ரீபாஷ்யம், வேதாந்த தீபம் வேதாந்த ஸாரம், வேதார்த்தஸங்க்ரஹம், கீதாபாஷ்யம், சரணாகதி கத்யம் ஸ்ரீரங்ககத்யம், ஸ்ரீவைகுண்டகத்யம், நித்யம்—என்று ஒன்பது திவ்ய க்ரந்தங்களையே இங்கு மணிக்கதவ மென்கிறது. கதவு எப்படி பதார்த்தங்களுக்கு ரக்ஷகமோ அப்படியே இந்த திவ்யக்ரந்தங்களும் மறைப் பொருள்களுக்குச் சேமக்

காப்பாக அமைந்தவை யாதலால் கதவென்றது மிகப்பொருத்தம். (கதவு, கதவம்– இவை பர்யாயமே.) இந்த க்ரந்தங்களிலுள்ள பொருள்களை நாங்கள் அநுபவிக்கும்படி செய்தருளவேணுமென்பது தாள் திறவா யென்றதன் கருத்து. "ஆயர் சிறுமியரோமுக்கு மணிக்கதவம் தாள் திறவாய்" என்று அந்வயிப்பது. அறிவிலிகளான எங்களுக்குப் புரியும்படி யருளிச் செய்யவேணு மென்கை.

[மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான் ] எம்பெருமான் தன்னுடைய சாஸ்த்ரங்களிலே முன்னமே தேவரீரைப்பற்றிச் சோதிவாய் திறந்து பணித்துள்ளானென்று கருத்து. * கலௌ ராமாநுஜஸ் ஸ்ம்ருத: * கலௌ கக்சித் பவிஷ்யதி * உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்வதர்சிந: * இத்யாதி ப்ரமாணங்களை இங்கே அநுஸந்திப்பது. ... .... ... ....

## —ஸ்வாபதேசார்த்தப்ரதிஷ்டாபனம்—

இதைத்தொடர்ந்து இன்னும் சிலவிஷயங்களும் கேளீர். திருச்சந்தவிருத்தத்தில் (49) * கொண்டைகொண்ட கோதைமீது * என்கிற பாசுரத்தின் பின்னடிகள்—"நண்டையுண்டு நாரைபேர வாளைபாய நீலமே, அண்டைகொண்டு கெண்டைமேயும் அந்தணீரரங்கமே" என்பன. இதற்குப் பெரியவாச்சான்பிள்ளை தமது வியாக்கியானத்தில் ஸ்வாபதேசார்த்தமருளிச்செய்து, உடனே "இப்பாட்டில் சொன்ன ஸ்வாபதேசங்கள் இவர்க்கு நிலமல்லாதபோது தேசத்தையாச்ரயித்தநுபவிக்க இழிந்தவர்க்கு இப்பாட்டால் ஒரு ப்ரயோஜநமில்லை" என்றருளிச் செய்து தலைக்கட்டினார். இங்கே அரும்பதவுரை வருமாறு—"சப்தத்துக்கு அர்த்தம் வேறுயிருக்க, இப்படி ஸ்வாபதேசத்திலே ஒதுக்குவானென்னென்ன அருளிச் செய்கிறார் (இப்பாட்டில்) இத்யாதி. நிலமல்லாதபோது=விவக்ஷிதமல்லாதபோது." என்பதாக. பெரியவாச்சான்பிள்ளை எல்லாவிடங்களுக்கும் ஸ்வாபதேசார்த்தமருளிச்செய்யாவிடினும் இங்கு இங்ஙனே அருளிச்செய்து வைக்கையாலே எங்கும் ஸ்வாபதேசார்த்தங்களை விவேககுசலர்கள் உய்த்துணரவேணுமென்று காட்டியருளினராகிறார் என்பதில் ஐயமில்லை.

ஆசார்யஹ்ருதயத்தில் 139 ஆம் சூர்ணை முதலாக 155 ஆம் சூர்ணையளவாக ஸ்வாபதேசார்த்தங்களை விளக்கியருளி யிருப்பது காணுமளவில் நம்பூர்வாசாரியர்கள் ப்ரவசனங்களில் ஸ்வாபதேசார்த்தங்களை மேம்பட உரைத்து வந்தார்களென்பது தெளிவாகும். திருப்பாவையை யநுபவிப்பதென்றால் அதிலுறையும் விசேஷார்த்தங்களையும் ஸ்வாபதேசார்த்தங்களையும் விளக்காமல் எப்படியநுபவிப்பது? விசேஷித்து திருவிருத்தத்திற்கும் திருப்பாவைக்கும் ஜீவநாடியாயிருப்பது ஸ்வாபதேசார்த்தமே. நான்குபாஷைகளிலும் [அதாவது, வடமொழி தென்மொழி வடுகு ஹிந்திகளில்] நாமெழுதி வெளியிட்டு உலகம் பரவியுள்ள விபுலவியாக்கியானங்களைக்கொண்டு களிப்பவர்களும் அவற்றை அப்படியப்படியே ப்ரவசனம்செய்து போருமவர்களும் எங்கும் மலிந்துள்ளார்களன்றோ.

சில ப்ரவசனகர்த்தாக்கள் (சொல்லி வருவதாவது) ஸ்வாபதேசார்த்தமென்று ஒரு பொருளை ஏறிட்டு யதேஷ்டமாகச் சொல்லுவது பூர்வாசார்ய வியாக்கியான விருத்தமென்றும், முக்கியமாக ஸ்வாபதேசமென்னும் பதமே பொருளற்ற

தென்றும் சொல்லுவதாகக் காதில் விழுகிறது. பூருவாசாரியர்கள் நுட்பமாகக் காட்டியருளியிருக்கும் வழி வழுவாது ஸ்வாபதேசார்த்தங்களைக் கண்டறிந்து சொல்ல சக்தியற்றவர்கள் இபபடிச் சொல்லுவதில் வியப்பில்லை.

ஸ்வாபதேசமென்கிற ஸம்ஜ்ஞை ஸம்ஸ்க்ருத சாஸ்த்ர ஸரணியின்படி பொருந்தாதென்பவர்களின் அபிப்ராயம் யாதெனில்; அபதேசமென்கிற சொல்லானது வ்யாஜமாகக் கைக்கொள்ளப்பட்ட அமுக்கியத்தைக் குறிப்பதாகும். இது (அந்ய) என்கிற சொல்லோடு சேர்ந்து அந்யாபதேசம் என்று ஆகலாம் அமுக்கியமான வேறு பொருளைக் குறிப்பதென்று அச்சொல்லுக்குப் பொருள் சொல்லப் பொருத்தமுண்டு. அபதேசமென்கிற சொல்லானது (ஸ்வ என்கிற பதத்தோடு எங்ஙனேசேரும்? சேர்ந்தால் என்ன பொருள் கிடைக்கும்? அந்யமான பொருள் அமுக்க்யமாயிருக்கத் தகுதியுண்டு; ஸ்வம்மான பொருள் அமுக்க்யமாயிருக்கத் தகுதியில்லையே. வேறொன்றை வியாஜமாக்கிச் சொல்லுவது அந்யயபதேசம். இந்த ரீதியில் ஸ்வாபதேசமென்பதற்கு 'தன்னையே வியாஜமாக்கிச் சொல்லுதல்' என்றல்லவோ பொருளாகும். இது ஸம்பாவிதமன்றே ஆகவே இச்சொல் அஸங்கதம்—என்பது ஆக்ஷேபகர்களின் வாதமாகும்.

இனி இந்த ஆக்ஷேபத்தை நிரஸிக்கும்வழி காட்டுகிறோம். வடமொழியில் வ்யபதேச மென்றொரு சொல் ப்ரஸித்தம். அதற்கு என்ன பொருளோ அதுவே தான் அபதேச மென்பதற்கும் பொருள். வி என்கிற உபஸர்க்கம் சேர்ந்தாலும் சேராவிடினும் பொருள் ஒன்றே. வ்யபேக்ஷா, அபேக்ஷா என்கிற சொற்களை இங்கு நிதர்சனமாகக் கொள்க; ஸாபேக்ஷ', நிரபேக்ஷ' என்கிற பதங்களின் ஸ்தானத்திலேயே 'ஸவ்யபேக்ஷ:, நிர்வ்யபேக்ஷ:' என்கிற பதப்ரயோகங்களையும் ப்ரஸித்தமாகக் காண்கிறோம் "ஸ்வக்ரியாஸாதநவ்யக்ரோ நாலமந்யத் வ்ய பேக்ஷிதும்" என்பது தண்டியின் காரிகை. இங்கு "நாலமந்யதபேக்ஷிதும்" என்றாலும் ச்லோகம் கூடும். பொருளிலும் குறையில்லை. ஆயினும் வி என்னு முபஸர்க்கத்தைச் சேர்த்து ப்ரயோகிக்கப்பட்டது. அது சேர்ந்தாலும் சேரா விட்டாலும் பொருள் ஒன்றே. இங்ஙனே காட்டக்கூடிய நிதர்சநங்கள் ஒன்றல்ல, இரண்டல்ல; பலபலவுள்ளன. அபகம: வ்யபகம:, அபாய: வ்யபாய:................ என்றிங்ஙனே கண்டுகொள்வது இவ்வண்ணமாகவே வ்யபதேசமென்பதும் அபதேசமென்பதும் பர்யாயமாக வழங்கும். வ்யபதேசமென்பதற்கு 'குறித்தல்' என்று பொருள், அபதேசமென்பதற்கும் அதுவே பொருள். முக்கியமாக உத்தேசிக்கப்பட்ட பொருளைக்காட்டிலும் வேறான வேறு பொருளைக் குறிப்பது அந்யாபதேசம்; உண்மையில் விவக்ஷிதமான பொருளையே குறிப்பது ஸ்வாபதேசம். அந்யஸ்ய அபதேச: அந்யாபதேச:; ஸ்வஸ்யைவ அபதேச: ஸ்வாபதேச:. ஸ்வம் அபதிச்யதே அஸ்மிந்நிதி ஸ்வாபதேச; அந்யத் அபதிச்யதே அஸ்மிந்நிதி அந்யாபதேச: என்னவுமாம். ஒரு பதத்திற்கு எத்தனை பொருள்களுண்டு, எத்தனை பொருள்களில் பிரயோகமுண்டு என்பதை ஆழ்ந்த அறிவுடையார் ஆராய வல்லவர். அபதேச பதத்திற்கு இன்னது அர்த்தம் என்பதைக் கீழே விவரித்தோம் ஸுப்ரஸித்தமான நாமலிங்காநுசாஸநமென்கிற அமரகோசத்தில் மூன்

ருவது காண்டத்தில் நாநார்த்த வர்க்கத்தில் "பதே லக்ஷ்யே நிமித்தே அபதேசஸ் ஸ்யாத்" என்றுள்ளது. *அபதேச: புமாந் லக்ஷ்யே நிமித்தவ்யாஜயோரபி* என்பது விச்வகோசம். இப்படியே பலபல கோசங்கள் கிடைக்கும். லக்ஷ்ய மென்கிற முதற்பொருளைவிட்டு வேறு பொருளைப்பற்றிக்கொண்டு ஆக்ஷேபம் செய்வது ப்ராஜ்ஞக்ருத்யமன்று. அந்யார்த்தத்தை லக்ஷ்யமாகக் கொண்டது அந்யாபதேசம்; ஸ்வம்மான அர்த்தத்தை லக்ஷ்யமாகக்கொண்டது ஸ்வாபதேசம் என்றும் எளிதாகத் தெளிய வழியிருக்க, விபரீதவழிகளிற்புகுந்து க்ஷேபிப்பதே!

நன்னூலில் "எப்பொருள் எச் சொலின் எவ்வாறுயர்ந்தோர், செப்பின ரப்படி செப்புதல் மரபே" என்பது ஒரு சூத்திரம். ஒரு பொருளில் பெரியோர் கள் ஒரு சொல்லைவழங்கிவந்தால் கீழுள்ளவர்கள் அதையே ஆதரித்துப் பேச வேண்டுமென்பது இதன் தாற்பரியம். ஸ்வாபதேச அந்யாபதேச பதங்கள் இன்று நாம் புதிதாகப் படைத்தவையல்ல. நம் ஸம்ப்ரதாய க்ரந்தமாக அவதரித்துள்ள ப்ராசீநாசார்ய மணிம்ரவாள நூல்களில் மிகமிக இடம் பெற்றவை இச்சொற்கள். இவற்றுக்கு ஒருவிதமான உபபத்தியும் இல்லாமற்போனாலுங்கூட 'ஸாங்கேதிக சப்தங்களிவை' என்றுகொண்டு உகந்திருக்கக் கடமையுண்டு. வஸ்துஸ்திதியில் உபபத்திக்கு ஒரு குறையுமில்லையாயிருக்க இதில் குசோத்யம் செய்வது தவறு.

நமது ஸம்ப்ரதாயத்தில் புருஷகாரமென்கிற சொல் வழங்கிவருகின்றது. இச்சொல் மணிப்ரவாள நூல்களில்மட்டு மன்றிக்கே பூர்வாசார்யாநுக்ருஹீத ஸம் ஸ்க்ருத க்ரந்தங்களிலும் ஆதரிக்கப்பட்டுள்ளது. இது ஸம்ஸ்க்ருத நிகண்டுகளில் எதிலும் காணக்கிடைக்காது. *லக்ஷ்மீ: புருஷகாரத்வே நிர்திஷ்டா பரமர்ஷிபி:* இத்யாதி பகவச்சாஸ்த்ரவசனங்களில் மலிந்துள்ளது. இச்சொல் எப்படி நிஷ் பந்நமாகிறதென்று வேதாந்த தேசிகன் விமர்சிக்கப்புகுந்து என்ன ஸமாதானம் எழுதியிருக்கிறரென்பதை நோக்கவேணும். இது தர்மபரமான சொல்லா? தர்மி பரமான சொல்லா? என்றும் விமர்சிக்கவேணும். இவ்விசாரங்களை தேசி கனே செய்தருளி, ஸம்ப்ரதாய முறைமையில் வழங்கிவருமிச் சொல்லில் நமக் கென்ன விசிகித்ஸை என்று முடித்து நின்றார். ஸ்வாபதேசாந்யாபதேச பதங்கள் புருஷகார சப்தம்போலே கைகூப்பி நிற்கவேண்டியவையல்ல. சாஸ்த்ரீயமான உப பத்தி பொருந்தியவை - என்பது புநருக்தம். ஆக இவ்வளவும் ஸ்வாபதேசார்த்த மென்கிற சப்தப்ரயோகமே அஸாது என்றவர்களது கலக்கத்தை அகற்றினேம்.

ஒலிவடிவத்தின்மேல் ஸ்பஷ்டமாகக் கிடைக்கிற பொருளுக்குமேற்பட ஸ்வாபதேசார்த்தமென்று வேறொன்று கொள்வது அநவஸரம் - என்பவர்கள் அலங்காரசாஸ்த்ரவைதேசிகர்களென்பதை முந்துற முன்னமே விளக்கியாயிற்று. ஆண்டாள் தானும் * கீசு கீசு பாசுரத்திலே "பேசினபேச்சு கேட்டிலையோ" என்னாதே பேச்சரவம் கேட்டிலேயோ? என்றதை ஊன்றி நோக்கினல் நல்ல தெளிவுவிளையும். ரவ: என்னும் வட சொல்லே அரவமென்றாயிற்று. த்வனி யென்பது அதன்பொருள். 'திருப்பாவையில் வெறும் சப்தார்த்தமேயா கேட்டாய்? த்வனிப்பொருள் கேட்கவில்லையோ?' என்று ஆண்டாள்தானே கேட்பது போலிரா நின்றதே! * கலந்துபேசின பேச்சரவங் கேட்டிலையோ?* என்றது உயிரானது'. *

## ரஸ்யரஹஸ்யார்த்தங்களிரண்டு

### ஆண்டாள்சரிதையைப் பெரியாழ்வாரும், பெரியாழ்வார் சரிதையை ஆண்டாளும் காட்டுதல்.

ஆண்டாளுக்குச் சூடிக்கொடுத்த நாச்சியாரென்று திருநாமம் ப்ரஸித்த மாகவுள்ளது. இந்த இதிஹாஸத்தை நாம் கர்ணபரம்பரையினுலும் குருபரம்பரா ப்ரபாவத்தினுலும் "ஸ்வோச்சிஷ்டாயாம் ஸ்ரஜி நிகலிதம் யா பலாத்க்ருத்ய புங்க்தே கோதா* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியினுலும் கோதாஸ்துதியினுலும் அறியப்பெற்று வருகிறோம். இது அதிசயமன்று பெரியாழ்வாருடைய திவ்ய ஸூக்திகொண்டே இதனை யறியப் பெறுவது விசேஷமல்லவா? அது கேளீர்.

ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் பாடலாகப் பெரியாழ்வார் திருமொழியில் ஒரு பாசுரமும், நாச்சியார் திருமொழியில் ஒரு பாசுரமுமேயுள்ளது. பெரியாழ்வா ரருளிய பாசுரத்தில் ஆண்டாள் பெருமையும், ஆண்டாளருளிய பாசுரத்தில் பெரியாழ்வார் பெருமையும் [வ்யஞ்ஜநாவ்ருத்திமுறையில்] அறியக்கிடப்பது ஆய்ந்துணரத்தக்கது. பெரியாழ்வார் வில்லிபுத்தூரைப் பாடின பாசுரம் ''மின் னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல் நுழைந்த வண்டு இன்னிசைக்கும் வில்லி புத்தூர்* என்பது. இங்கு கட்கண்ணோடு உட்கண்ணையும் செலுத்தவேணும். மின்னனைய நுண்ணிடையார் என்று க்ருசோதரியென்றேற்றம் பெற்ற ஸ்த்ரீயைச் சொல்லுகிறது; ஸாமாந்ய நாமமான விதனை விசேஷ நாமமாகக்கொண்டு ஆண்டாளே இங்கு விவக்ஷிதையெனக்கொள்க. அவளுடைய குழல்மேல் ஒரு வண்டு நுழைந்ததாம். திருவாய்மொழியில் *தூவியம்புள்ளுடைத் தெய்வவண்டு* என்னப்பட்ட எம்பெருமானுகிற வண்டு காதல்கொண்டது என்கை. கூந்தலா னது வண்டை யிழுக்கும்; இவளோ *அலகவிநிஹிதாபிஸ் ஸ்ரக்பிராக்ருஷ்டநாதா.

நாச்சியார் திருமொழியில் *மென்னடையன்னம் பரந்து விளையாடும் வில்லி புத்தூர்* என்கிற பாசுரம் ஆண்டாள் வில்லிபுத்தூரைப் பாடினது. இதில் ஹம்ஸவ்ருத்தாந்தம் கூறப்படுகின்றது. *அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த* என்றார் கலியன். *பின்னிவ்வுலகினில் பேரிருள் நீங்க அன்று அன்ன மதானனே அருமறை தந்தானே* என்றார் பெரியாழ்வார் தாமே. இருள் நீங்க வேதமுரைக்கத் தோன்றிய அவதாரம் ஹம்ஸாவதாரம். * இந்தவுலகிலிருள் நீங்க வந்து உதித்த ஆழ்வார்களில் ''ப்ராஹ வேதாந் அசேஷாந்'' என்றும் ''வேண்டிய வேதங்களோதி" என்றும் சொல்லுகிறபடியே வித்வத்ஸதஸ்ஸில் வேதமோதினது தவிர வேதப்ராதுர்ப்பாவ விசேஷமான திவ்யப்ரபந்தத்தையு மருளிச் செய்து ''வேதப்பயன் கொள்ளவல்ல விட்டு சித்தன்'' என்று தம்வாக் காலும் பேசிவைத்தார். ஆகவே மென்னடையன்ன மென்றது பெரியாழ்வாரை. ஆசார்ய ஹ்ருதயத்திலும் ஹம்ஸஸ்வாபதேச சூர்ணையில் பெரியாழ்வாரைக் காண்பது அவர் விளையாடுவதாகச் சொன்னது ''க்ரீடார்த்தமபி யத் ப்ரூயுஸ் ஸ தர்ம: பரமோ மத:'' என்கிற வசனத்தை நினைவூட்டும்.

ஆக ஆண்டாள் பெருமையைப் பெரியாழ்வாரும், பெரியாழ்வார் பெருமையை ஆண்டாளும் வெளியிட்டவாறு காட்டப்பட்டதாயிற்று. ... .... *.

---

## சென்னை உயர்நீதிமன்றத்தில் ஜட்ஜ் பதவியை வஹிக்கும் உயர்திருவாளர் A. அழகிரிசாமியவர்கள்

## P. B. A. ..............க்கு மாலையிடுகிறார்.

கீழே நாம் வெளியிட்டுள்ள நமது கட்டுரையில் [அதாவது, மன்னியசீர் மார்கழி யுபந்யாஸ விசேஷங்களென்னும் மகுடம்வாய்ந்த வியாஸத்தில்] ப்ராஸங்கிகமாக எடுத்துக் காட்டியுள்ள பர்த்ருஹரி ஸுபாஷிதத்தில் "ப்ரபவ: ஸ்மயதூஷிதா:" என்றதைப் பொய்யாக்கவல்ல பெருமைவாய்ந்த ப்ரபுக்களும் உலகில் இல்லாமற் போகவில்லை. அன்னவர்களில் தலைவராக நாம் கண்டறிந்த பெரியார் உயர்திரு அழகிரிசாமியவர்கள் இப் பெரியார் நேற்று மார்கழித் திங்களில் பெரும்பாலும் நமது ஸத்காலக்ஷேப ஸபைக்கு விஜயஞ் செய்ததுபற்றி ஸபைத் தலைவர்கள் ஸபையிலேயே பெருநன்றி பாராட்டி யிருந்தாலும் நாடறிய நமது கடமையை நாம் செலுத்த வேண்டியது அவசியமாகிறது. இப் பெரியாருடைய பேச்சுக்களின் வன்மையையும் நன்மையையும் கீழே 6, 7, 8 பக்கங்களில் வாசித்தறிந்திருக்கிறீர்கள். அதில் அவர்கள் என்னைப்பற்றி உயர்த்திப் பேசியிருப்பதை எல்லாம் அவர்களது அன்புமிக்க ஆசியாகக் கொள்வதத்தனையன்றி உள்ளது கூறுதலாகக் கொள்ள இயலுமோ?



உலகில் அணுவாகவுள்ள குற்றத்தை மலையாகக் கொண்டு தூற்றுதல் சிலருடைய இயல்பு. சிலருடைய என்னத்தகாது, பலருடைய என்னவேணும். அணுவாகவுள்ள குணத்தையும் மலையாகக் கொண்டு பேசுமவர்களில் தலைவர் நமது ஜட்ஜ் அவர்கள் என்பது உண்மையுரை. கல்விக்கடலான அவர்கள் கொண்டிருக்கும் வினயம் வானிலும் மிகப்பெரிது. ஆங்கிலத்தில் அவர்களது வல்லமையைக் கண்டறியுமாற்றல் எனக்கில்லை தமிழில் அவர்களது பேச்சினிமை பேராசிரியர்களும் வியக்கத்தக்கதாயிருந்தது. இப்பெரியார் தமக்கு வடமொழி

யில் பரிசயமில்லையென்று சொல்லிக்கொண்டாலும், வடமொழி நூற்களிலுள்ள விஷயங்களை நானெடுத்துரைக்கும்போது அவர்கள் ரஸித்த பாங்கைப் பலகால் அநுபவித்த வெனக்கு அவர்களது அந்தப்பேச்சில் முழுநம்பிக்கை யுண்டாகவில்லை. அவர்களை சபையார் நாடோறும் நாற்காலியில் வீற்றிருக்கச்செய்து கௌரவித்து வந்ததைப் பற்றி அவர்கள் ஸங்கோசம் காட்டியிருப்பது அவர்களுடைய ஒப்பில் பெருங்குணத்தையே உலகறியச் செய்துநிற்கும்.



அவர்களது மேன்மையையும் நீர்மையையும் பற்றி ஸ்ரீமது பயவே. V. ராஜகோபாலாசாரியார் (M.L.) ஸ்வாமிகளும், ஸ்ரீமது பயவே. (அட்வகேட்) K. S. சம்பகேசய்யங்கார் ஸ்வாமிகளும் பரக்கவும் வியக்கவும் பேசியவற்றைச் சபையார் செவியமுதமாகப் பருகிக் களித்திருப்பதால் என் புல்லுரையை இவ்வளவோடு நிறுத்திக் கொள்ளுகிறேன்.

இங்கே காட்சிதரும் உருவப்படம் அப்பெரியாருடைய குடும்பக் காட்சி. தெய்வபக்தியும் சாஸ்த்ரவிச்வாஸமும் மேம்பட்டுவிளங்கும் இக்குடும்பம் ஓங்கியுலகளந்த வுத்தமனருளால் நீங்காத செல்வம் நிறைந்து நீடூழிவாழ்க. .... *

---

## பந்தடித்தவர்கள் யார்யார்?

பெண்டுகள் பந்தடிப்பது பண்டைக்காலத்து வழக்கமென்பது திவ்யபிரபந்தங்களினால் நன்கு தெரியவருகிறது. பந்தடித்தவர்கள் இன்னாரின்னாரென்பதைப் பாசுரங்கள்காட்டி நிரூபிக்கக் கேளீர். *நப்பின்னைப் பிராட்டி பந்தடித்தது *பந்தார்விரலீயென்கிற திருப்பாவையினாலும், *பந்தணைந்த மெல்விரலாள் பாவையென்கிற (2-2-4) பெரிய திருமொழியினாலும் விளங்கிற்று. பெரியபிராட்டியார் பந்தடித்தது * பந்திருக்கும் மெல்விரலாள் பாவைபனிமலராள் * என்கிற (2-2-9) பெரிய திருமொழியினால் விளங்கிற்று. த்ரௌபதி பந்தடித்தாளென்பது* பந்தார் விரலாள் பாஞ்சாலி* என்கிற (6-7-8) பெரிய திருமொழியினால் விளங்கிற்று. பராங்குசநாயகிக்கும் பந்துக்குமுள்ள ஸம்பந்தம். திருவாய்மொழி (6-7-3) பாசுரத்தினால் விளங்கிற்று. பரகால நாயகி முன்பு பந்தடித்துக்கொண்டிருந்தாளென்பது *பந்தோடுகழல்மருவாள்* (5-5-9) பெரியதிருமொழியினால் விளங்கிற்று. பொதுவாகப் பெண்டுகள் பந்தடிப்பது (4-2 7) பெரிய திருமொழியினால் விளங்கிற்று. *

# திருப்பாவையும் - அர்த்தபஞ்சகமும்.

நாம் அநுபவிக்கும் ஸகலக்ரந்தங்களிலும் முக்கியமாக அர்த்தபஞ்சகம் உபஜீவ்யம் என்பது பூருவாசாரியர்களின் கொள்கை, திருமந்த்ரார்த்தமருளிச் செய்யாநின்ற பிள்ளை லோகாசாரியர் "அறிய வேண்டுமர்த்தமெல்லாம் இதுக்குள்ளேயுண்டு; அதாவது அஞ்சர்த்தம்" என்றருளிச் செய்தார். * ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந:, ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்தி விரோதி ச. வதந்தி ஸகலா வேதாஸ் ஸேதிஹாஸபுராணகாஃ" என்கிற ப்ரமாணவசனம் அர்த்தபஞ்சகத்தை விவரித்துக்காட்டுவது. பரமாத்ம ஸ்வரூபம் ஜீவாத்மஸ்வரூபம் உபாயஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம் விரோதி ஸ்வரூபம் ஆகிய இவையே அர்த்தபஞ்சகமெனப்படும். பிள்ளையுலகாசிரியர் இவ்வளவோடும் நில்லாமல் அடுத்த சூர்ணையில் "பூர்வாசார்யர்கள் இத்தையொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்" என்றும் அருளிச்செய்தார். அங்கு மணவாளமாமுனிகள் — "நாதயாமுனயதிவராதிகளான நம் பூர்வாசார்யர்கள் .... வேதசாஸ்த்ரங்கள் ஆழ்வாரருளிச் செயல்கள் இவற்றால் போதுபோக்கும் போதும் இம்மந்த்ரார்த்தத்தையுட்கொண்டே அநுஸந்திக்கையாலே "இத்தை





யொழிய வேறொன்றால் காலக்ஷேபம் பண்ணியறியார்கள்'' என்னத்தட்டில்லை என்றருளிச்செய்தார்.





திருவாய்மொழிக்குத் தனியனிட்டருளின முன்னோர்களும் ''மிக்க இறைநிலையும் மெய்யா முயிர்நிலையும், தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும், ஊழ்வினையும் வாழ்வினையு மோதும் குருகையர் கோன் யாழினிசை வேதத்தியல்.'' என்கிற வெண்பாவினால் திருவாய்மொழியாயிரத்திற்கும் அர்த்தபஞ்சகமே ப்ரமேயமென்று வெளியிட்டருளினார்கள். ஆசார்ய ஹ்ருதயத்தில் (211) ''மூன்றில் சுருக்கிய ஐந்தையும் * உயர் திண்ணணை யொன்று, *பயிலேறு கண் கரு, *வீடு சொன்னலொருக் கொண்ட, *நோற்ற நாலும், *எம்மா வொழிவில் நெடுவேய்என்கிற இருபதிலேவிசதமாக்கி எண்பதிலே பரப்புகையாலே ஐந்தையும்'' என்றவிடத்து மணவாளமாமுனிகளின் வியாக்கியானம் ஸேவிக்கத் தக்கது. ஆக, நாம் அநுபவிக்கும் ஸகல க்ரந்தங்களுக்கும் அர்த்தபஞ்சகமே ப்ரமேயமாமென்னுமிடம்தெளிவாயிற்று. இந்த நியாயத்தாலே திருப்பாவை முப்பது பாசுரங்களும் அர்த்தபஞ்சகமயம் என்று கொண்டே முன்னோர்கள் * வேதமனைத்துக்கும் வித்தாகுங் கோதைதமிழ் ஐயைந்து மைந்து மறியாதமானிடரை வையஞ்சுமப்பதும் வம்பு * என்றருளிச்செய்தனர். இதுதன்னைப் பரக்க உபபாதிப்பதை அடியே

னுடைய உபந்யாஸங்களிலே கேட்டிருக்கிறார்கள். ஈண்டு அதிஸம்க்ஷேபமாக விஜ்ஞாபிக்கிறேன். திருப்பாவைப் பாசுரங்களோடு வேதவாக்கியங்களையும் உப நிஷத்வாக்கியங்களையும் இணைத்து விஜ்ஞாபிக்கிறேன். உபந்யாஸக ஸௌபாக்ய மாக. [அர்த்தபஞ்சகத்தில் முதலது பரஸ்வரூபம்] ஸகலஜகத்துக்களுக்கும் காரண பூதனாயிருக்கையும், ஸர்வாத்ம ரக்ஷகனாயிருக்கையும், பரவ்யூஹவிபவாந்தர்யாமி அர்ச்சாரூபேண பஞ்ச ப்ரகாரமாக அவஸ்திதனாயிருக்கையும் பரஸ்வரூபமாகும்.

*ஏகோ ஹ வை நாராயண ஆஸீத்* *யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே* *அஜாயமாநோ பஹுதா விஜாயதே* ஸ உ ச்ரேயாந் பவதி ஜாயமாந:* *பிதா புத்ரேண பித்ருமாந் யோநியோநௌ* இத்யாதி வேதோபநிஷத்துக்கள் தெரி வித்தகட்டளையிலே ஆண்டாளும் *நந்தகோபன் குமரன்* அசோதை யிளஞ்சிங் கம்* நாராயணனே நமக்கே பறைதருவான்* *நாற்றத்துழாய்முடி நாராயணன்*



நம்மரல்போற்றப்பறைதரும் புண்ணியன்* என்றிவை முதலான பல பல திவ்ய ஸூக்திகளால் பரஸ்வரூபத்தை விவரித்தருளினாளாண்டாள். பரஸ்வரூப்விவரண மில்லாத பாசுரம் திருப்பாவையில் தேடியெடுக்கவேண்டியதாயிருக்கும். [அர்த்த பஞ்சகத்தில் இரண்டாவது ஸ்வஸ்வரூபம்.]* யஸ்யாஸ்மி ந தம் அந்தரேமி*

*யோஹமஸ்மி ஸ ஸந் யஜே* இத்யாதி வேதவாக்கியங்கள் ஸ்வஸ்வரூபப்ரதிபாதகங்கள் என்னுமிடத்தை பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவ—உத்தரசதகத்தில் (மூலத்திலேயே) காட்டியுள்ளார். சேஷத்வம்-அநந்யார்ஹசேஷத்வம், அசித்வத் பாரதந்த்ர்யம் ஸ்வஸ்வரூபமாகும். இது தன்னை ஆண்டாள் (நாம், நாமும், நாங்கள், நாங்களும், *உன்றன்னோடுற்றோமேயாவோம்* மாற்றாருனக்கு வலிதொலைந்துன் வாசற்கணாற்றாதுவந்துன்னடி பணியுமா* அபிமானபங்கமாய் வந்து....தலைப்பெய்தோம்* இத்யாதி பாசுரங்களாலே சுருக்கமும் பெருக்கமுமாகப் பேசிவைத்தாள். [அர்த்தபஞ்சகத்தில் மூன்றாவது உபாயஸ்வரூபம்.] * தஸ்மாத் ந்யாஸமேஷாம் தபஸாம் அதிரிக்தமாஹு:* *தஸ்மாத் அபி வத்யம் ப்ரபன்னம்: ந ப்ரதிப்ரயச்சந்தி* (காண்டம் 6, ப்ரச்நம் 5. இருமுறை) இத்யாதி வேதோபநிஷத்வாக்யங்கள் ப்ரபத்தியையே தஞ்சமாகக் காட்டிக்கொடுத்தன. ஆண்டாளும்* உன்பொற்றாமரையடியே போற்றும்* தொழுதுவாயினால் பாடிமனத்தினால் சிந்திக்க* உன்னையருத்தித்து வந்தோம்* இத்யாதி பாசுரங்களினால் இதனைக் காட்டியருளினாள்.



[இனி அர்த்தபஞ்சகத்தில் நான்காவது புருஷார்த்தஸ்வரூபம்.] எம்பெருமானார் தரிசனத்தில் நித்யகைங்கரியமே பரம புருஷார்த்தமாகக் கொள்ளப்படுகிறது. இதனை வேதாந்தங்கள் சரீராத்மபாவ ப்ரதிபாதனமுகத்தாலே [அதாவது*யஸ்யாத்மா சரீரம்* இத்யாதி முகத்தாலே] தெரிவித்தன, சரீரமானது ஜீவாத்மாவுக்குத் தானுள்ளவரையில் ஸகலகரணக்ராமங்களாலும் கைங்கரியமே செய்துகொண்டிருக்கும் படியை நாம் ப்ரத்யக்ஷமாகக் காண்கிறோம். எம்பெருமானார் அருளிச்செய்த சரீரலக்ஷணத்தில் [*யஸ்ய சேதநஸ்ய யத் த்ரவ்யம்* இத்யாதியில் "தச்சேஷைதகஸ்வரூபம்" என்றுள்ளது. காண்க. "அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வாநுபபத்தி:" "நாகிஞ்சித்குர்வதச் சேஷத்வம்" இத்யாதிகளும் காண்க. இதனை ஆண்டாள் *உனக்கே நாம் ஆட்செய்வோம்* என்று தலையாகத் தலைக்கட்டினாள். [இனி ஐந்தாவது—விரோதிஸ்வரூபம்.] திருநாட்டிலும், நம: நம: என்று சொல்லிக்கொண்டு விரோதிநிவ்ருத்தியையே வேண்டுகின்றார்கள். பட்டர் அஷ்டச்லோகியில் *ப்ரபலதரவிரோதி ப்ரஹாணம்* என்றது ஆண்டாளுடைய*மற்றைநங்காமங்கள் மாற்று* என்ற பாசுரத்தை யுட்கொண்டேயென்பது குருமுகமாக உணரத்தக்கது.

திருப்பாவையில் அர்த்தபஞ்சக நிரூபணஸங்க்ஷேபம் முற்றிற்று.

# பெங்களூர் வாஸிகளுக்குக் கிட்டின ஒரு சிறப்பான வாய்ப்பு

[டாக்டர். V. ராமையங்கார், பெங்களூர்.]

பெங்களூரில் ஒரு ஆஸ்திக குழுவினர் நெடுநாளாக நம் ஜகதாசார்ய ஸிம்ஹாஸனதிபதி மஹாவித்வான் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியார்ஸ்வாமியை வரவழைத்து அவரது வித்வத்ச்ரேஷ்டமான ஸித்தாந்த மஹா ரஹஸ்யார்த்தங்களை விரிவாகக் கேட்க ஆவல் கொண்டிருந்தனர். இந்த ஸ்வாமியைப் பல தடவை பிரார்த்தித்தும் பயனளிக்காமலிருந்தது. இதற்கு முக்கிய காரணம், ஸ்வாமியின் ஓச்சல் ஒழிவு இல்லாத அலுவல்களே. இப்படி பல தடவைகளில் தள்ளிப்போடப்பட்ட வாய்ப்பு,



பெங்களூர் ஆஸ்திக மஹா ஜனங்களுக்கு சென்ற ஜனவரி மாதம் 25 தேதியிலிருந்து 31 தேதிவரையில் ஒருவார அநுபவம்—மிகச் சிறந்த முறையில் பாக்யவசத்தால் கிட்டியது. ஸ்வாமிக்கு சமீபகாலத்தில் ராஷ்ட்ரபதி பாரத நாடு வித்வத் பரிசை அளித்தார். அவர் அடைந்த இந்த சிறந்த கௌரவத்தை மற்றப் ப்ராந்திய அபிமானிகள் ஆங்காங்கே கொண்டாடினார்கள். அம்மாதிரி பெங்களூர் அபிமானிகளும் கொண்டாடவேண்டி, சிறப்புவாய்ந்த பிரதிநிதிகளடங்கிய ஒரு வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டது. அதற்கு தலைவராக முன்னாள் மந்திரி, ஸ்ரீமான் M. A. ஸ்ரீனிவாஸன் அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார். இந்த குழுவில் 27 உபதலைவர்களும், 38 மெம்பர்களும் அடங்கியிருந்தனர். மற்றும் அனேக ஆஸ்திக ஸமாஜங்களும் சேவா ஸமிதிகளும் இதில் இடம் பெற்று

இருந்தனர். இந்த குழுதான் மஹாவித்வான் அண்ணங்கராசாரியார் ஸ்வாமிகளுக்கு மல்லேச்வரம் கிருஷ்ணன் கோயிலில் ஜனவரி 25 தேதி சனிக்கிழமை மாலை அமோகமான வரவேற்பு அளித்தது. பிறகு ஊர்வலமாக இந்தக் கோவிலிலிருந்து மல்லேஸ்வரம் ஸ்ரீராம மந்திரத்திற்கு இந்த ஸ்வாமி அழைத்துச் செல்லப்பட்டார். அங்கு, மைசூர் ராஜ்யத்தி லிருக்கும் பல முக்கிய ஆலயங்களிலிருந்து இந்த நம் மஹாவித்வானுக்கு பரிவட்டம் மாலை மரியாதைகள் அனுப்பப்பட்டு வழங்கப்பட்டன.

பிறகு வரவேற்பு கமிட்டியின் கார்யதர்சி, டாக்டர் அனந்தாழ்வார் வரவேற்பு பத்திரத்தை ஆங்கிலத்தில் படித்தார். பிறகு ஸம்ஸ்கிருதம், தெலுங்கு, தமிழ், கன்னட பாஷைகளிலும் வரவேற்பு வாசித்து அளிக்கப்பட்டது. அனேக வித்வான்கள், கவிகள் ஸ்வாமியின் அபூர்வமான ஞானத்தையும், ஸகல சாஸ்திர பாண்டித்யத்தையும் சென்ற 60 வருஷங்களில் ஸ்ரீ வைஷ்ணவத்திற்கு ஸ்வாமி புரிந்த சிறந்த சேவைகளையும் பாராட்டினர்கள். பிறகு நம் ஸ்வாமி பகவத் ராமானுஜ சித்தாந்தத்தின் நுட்பொருள்களை யஜுர்வேதம், உபநிஷத், கீதை முதலியவைகளிலிருந்து அனேக ப்ரமாணங்களுடன் விரிவாக எடுத்துரைக்கத் தொடங்கினர்.



உபந்யாஸங்கள் ஏழு தினங்கள் நடந்தன. ஒவ்வொரு உபந்யாஸமும் அபூர்வமான ரஹஸ்யார்த்தங்கள் ததும்பியிருந்தன. வித்வான்களும் பக்தச்ரேஷ்டர்களும் திரள் திரளாக வந்து ஸபை ஹாலில் உள்ளும்புறமும் நிரம்பியிருந்தனர். இந்த அபூர்வமான உபந்யாஸங்களை, ஸ்ரீ வைஷ்ண பூர்வாசாரியர்கள் காட்டியிருக்கிற தோரணையில் அவர்களது ஒவ்வொரு சொல்லுக்கும் வேதப்ரமாணங்களுடனும், ஆழ்வார்கள் ஆசாரியர்கள் அருளிச்செய்த ஸ்ரீஸூக்தி ப்ரமாணங்களுடனும் வியக்கத்தக்க முறையில் காம்பீர்யமான தொனியில் பெருப்பேருகக் கிடைத்த இந்த ஞான விசேஷத்தை பொதுமக்கள் கேட்டு, அநுபவித்து ஆனந்தபரவசராயினர். மைசூர் ப்ராந்தியத்திலிருக்கும் பல பெருமைபெற்ற வித்வான்கள், அண்ணங்கராசாரியார்ஸ்வாமியின் உபந்யாஸங்களைக் கேட்க அங்கு வந்து

கூடியிருந்தனர். ஸ்ரீ காஞ்சீ வாதிகேஸரி அழகிய மணவாள ஜீயர்ஸ்வாமி ஏழு நாளும் உபந்யாஸ மேடையில் வீற்றிருந்து அந்த வித்வத் ஸபையை அலங்கரித்தார். இம்மாதிரியான ஒப்பு உயர்வு இல்லாத, ஞானம் ததும்பிய உபந்யாஸங்கள் பெங்களூரில் இதுவரையில் நடந்ததில்லை; இனி நடக்கப்போவதும் அரிது என்று எல்லோரும் ஸ்வாமியை ஏகமனதாகப் போற்றினுர்கள். ஸ்வாமி ஒருவரே, ஸகல தத்வார்த்தநிதி என்றும், ஸகலகலா நிகண்டுவென்றும் ஸபையோர்கள் புகழ்ந்தார்கள். வேதத்தைப் பின்பற்றியே ஸ்ரீ ராமானுஜ சிந்தாந்தம் நிலைத்து நிற்கின்றது என்றும், இந்த ஸித்தாந்தத்தை எல்லா ஆசார்யர்களும், நாதமுனிகள் தொடங்கி, ஆளவந்தார், ராமானுஜர், கூரத்தாழ்வான், ஸ்ரீ பராசரபட்டர், பெரியவாச்சான்பிள்ளை, வேதாந்த தேசிகர், மணவாளமாமுனிகள் எல்லோரும் தத்வார்த்தங்களை ஒரே ரீதியாய், ஒரே நோக்குடன் வாசியற வெளியிட்டு இருக்கிருர்கள் என்றும் ப்ரமாணங்களுடன் அண்ணங்கராசாரியார்ஸ்வாமி விளக்கிக்காட்டி அழகாக நிரூபித்தார். வரவேற்பு கமிட்டியார், ஸ்வாமியின் கல்விப் பெருமைக்கும் வாக்கின் மேன்மைக்கும் தக்கபடி எல்லா ஏற்பாடுகளையும் நன்கு செய்திருந்தார்கள்.

கடைசி தினம் "நாடு புகழும் பரிசினுல் நன்ருக" என்ற ஆண்டாள் வாக்குப்படி, ஸ்வாமிக்கு ஸம்மானங்கள் அளிக்கப்பட்டன. ஸ்வாமி தக்க முறையில் தக்க சொற்களால் வரவேற்புக் கமிட்டிக்கும், அந்த பெரிய கோஷ்டிக்கும் தமது க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக்கொண்டார். அன்று தலைமைதாங்கிய மைசூர் ஐகோர்ட் நீதிபதி ஸ்ரீமான் கோபீவல்லப அய்யங்கார், ஸ்ரீ ராமானுஜ ஸித்தாந்தம் எல்லா மக்களையும் வாழ்விக்கும் ஸித்தாந்தமென்றும், ப்ரதிவாதிபயங்கரம் ஸ்வாமி ஒரு அபூர்வமான ஞான பொக்கிஷம் என்றும், இவர் உபயவேதாந்தத்திலும் தனிப்பெருமைபெற்றவர் என்றும் ஸ்வாமியைப் பாராட்டிப் பேசி, அந்த ஒருவார விசேஷ அநுபவம் பெங்களூர் வாஸிகளான நமக்கு பகவத் க்ருபையால் ஏற்பட்ட மஹா பாக்யம் என்றும் புகழ்ந்து பேசினுர். இந்த வைபவம் மிகவும் குதூகலத்துடன் முடிவு பெற்றது. ... ... ❊

# P. B. A. ஸ்வாமியின் பெங்களூர் விஜயம்

**பெங்களூர் மல்லேச்வரத்திலுள்ள ஸ்ரீராம பஜன மந்திரத்தில் 26—1—69ம் தேதி சென்னை அட்வகேட் ஸ்ரீ R. V. சேஷாத்திரி நிகழ்த்திய உரை.**

ஆஸ்திக மகாஜனங்களனைவர்க்கும் என் மனப்பூர்வமான நமஸ்காரம். நான் மதராஸ் வாஸி. சென்ற சுமார் பத்து வருஷங்களுக்கு மேலாக நான் ஸ்ரீமான் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியார் ஸ்வாமியின் உபன்யாஸங்களைத் தவருமல் கேட்டு வருகிறேன். இதுவரையில் சுமார் ஆயிரம் உபன்யாஸங்களைக் கேட்டிருப்பேன். மதராஸில் ஸ்வாமியின் உபன்யாஸங்களைக் கேட்க அநேகமாக ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்களே வருவார்கள். அங்கு ஸ்வாமி ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயக் கிரந்தங்களிலிருந்து அதிகமாக விஷயங்களை எடுத்துக் கூறி உபன்யஸிப்பார். அங்குள்ளவர்கள் அவற்றை நன்கு புரிந்துகொண்டு ரஸிப்பார்கள். இங்குள்ள ஜனங்களுக்கோ தமிழ்

பாஷையில் அதிகமான பரிசயம் கிடையாது. மேலும் இந்த ஸபையில் பல மதங்களைச் சேர்ந்தவர்கள் இருக்கிறார்கள். இங்கு த்வைதிகள் இருக்கிறார்கள்; அத்வைதிகள் இருக்கிறார்கள்; விசிஷ்டாத்வைதிகள் இருக்கிறார்கள்; இன்னும் சைவ மதத்தைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள். இவர்களெல்லோருக்கும் பொதுவான முறையில் பொதுவான ப்ரமாணங்களைக்கொண்டு ஸ்வாமி இங்கு எப்படி உபன்யஸிக்கிறார் என்பதைக் காண வேண்டுமென்ற அவா எனக்கேற்பட்டது. ஆகவே நானும் சில நண்பர்களும் இவ்வூரில் ஸ்வாமியின் உபன்யாஸத்தின் விசேஷ அம்சங்களை யநுபவிக்கவே இங்கு வந்தோம். நேற்று சாயங்காலம் நான் இதுவரையில் கேட்டிராதவகையில் நூதன ஸரணியில் ஸ்வாமி உபன்யாஸம் செய்தார். இவ்விதமான உபன்யாஸத்தை நான் முதன்முதலாக நேற்றுத்தான் கேட்டேன். மிகவும் ஆச்சரியமடைந்தேன்.



நேற்று ஸ்வாமிக்கு இங்கு வாசித்தளிக்கப்பட்ட புகழுரைகளில் இங்கிலீஷிலும் கன்னடத்திலும் உள்ளவைகளில் ஸ்வாமியின் சரித்திரமும், அவருடைய சிறந்தசாதனைகளும் மிக நன்கு கூறப்பட்டுள்ளன. அவற்றை மறுபடியும் நான் இங்குக் கூறவிரும்பவில்லை. அவற்றில் இல்லாதவைகளும், பல பேர்களுக்குத் தெரியாதவைகளுமான நம் ஸ்வாமியைப்பற்றிய சில அபூர்வமான அம்சங்களையே நான் இங்கே கூறப்போகிறேன்.

வேதங்களை ஒப்புக்கொண்ட அனைவர்களுக்கும் "ஆதௌ வேதா: ப்ரமாணம்" என்கிறபடி வேதங்கள் முதல் ப்ரமாணங்களாகும். இப்படி வேதங்களை முக்கிய ப்ரமாணமாக ஒப்புக்கொண்ட பல மதங்களுள் தற்காலத்தில் பிரஸித்திபெற்று விளங்குவது வேதாந்த ஸித்தாந்தமாகும். இந்த ஸித்தாந்தத்தில் த்வைதமதம், அத்வைதமதம், விசிஷ்டாத்வைதமதம் என்று மூன்று பிரிவுகள் இருக்கின்றன. இவைகளெல்லாவற்றிற்கும் **ப்ரஸ்தானத்ரயம்** என்று சொல்லப்படும் மூன்று ப்ரஸ்தானங்கள் பொதுவான ப்ரமாணங்களாகும். அவற்றில் ஈச, கேன, கட, ப்ரச்ன, முண்டக, மாண்டூக்ய, ஐதரேய, தைத்திரீய,

சாந்தோக்ய, ப்ருஹதாரண்யக என்ற பெயர்கள்கொண்ட பத்து உபநிஷத்துக்கள் முதல் ப்ரஸ்தானமாகும். பகவத்கீதை இரண்டாவது ப்ரஸ்தானமாகும். வேதவ்யாஸ மஹரிஷி அருளிய பிரம்மஸூத்ரம் என்னும் கிரந்தம் மூன்ருவது ப்ரஸ்தானமாகும். இந்த மூன்று ப்ரஸ்தானங்களுக்கும் சங்கராச்சாரியார், ராமாநுஜாச்சாரியார், மத்வாச்சாரியார் ஆகிய மூன்று மதாச்சாரியர்களும் பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். இம்மதங்களுள் விசிஷ்டாத்வைதம் என்று சொல்லப்படும் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு மேலே சொன்ன மூன்று ப்ரஸ்தானங்களைத் தவிர நான்காவது ப்ரஸ்தானமும் ஒன்றுண்டு. அதாவது ஆழ்வார்கள் என்று பிரஸித்திபெற்ற பன்னிருவர்கள் அருளிய நாலாயிரம் தமிழ்ப் பாசுரங்கள் ஆகும். இந்த நாலாயிரத்திற்கும் நாலாயிர திவ்யபிரபந்தம் என்று பெயர். ஆழ்வார்களெல்லோரும் பெரிய யோகிகள். சிறந்த ஞானம் படைத்தவர்கள். ஆகவே அவர்கள் வேதங்கள், ப்ரஸ்தானத்ரயங்கள் இவைகளிலுள்ள அருமையான சாஸ்த்ரார்த்தங்களை பாமரஜனங்களும் அறிந்துகொள்ளும்வண்ணம் தமிழ் பாஷையி லுள்ள நாலாயிர திவ்யபிரபந்தத்தில் நன்கு எடுத்துரைத்திருக்கிருர்கள். ப்ரஸ்தானத்ரயங் களுடன் நாலாயிர திவ்யப்ரபந்தத்தையும் சேர்த்து ஸ்ரீ வைஷ்ணவர்கள் க்ரந்த சதுஷ்டயம் என்று கூறுவார்கள். இவை யாவற்றையும் உயர்ந்த ப்ரமாண க்ரந்தங்களாகக் கொண்டாடுகிருர்கள். இந்த க்ரந்த சதுஷ்டயமும் நம் ஸ்வாமிக்கு மனப்பாடம். அவற்றிலிருந்து எதைக் கேட்டாலும் ஸ்வாமி உடனே தங்குதடையின்றி எடுத்துரைப்பர்.

ஆழ்வார்களுக்குப் பின்தோன்றிய ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள் இந்த நாலாயிர திவ்யப்ரபந்தத்திற்கு மூன்றுவிதத்தில் தொண்டுகள்புரிந்து ஜனங்களுக்கு உபகாரம் செய்திருக்கிருர்கள். சில ஆசாரியர்கள் இந்த நாலாயிர திவ்யப்ரபந்தத்திற்கே வ்யாக்யா னங்கள் எழுதி ஜனங்கள் அவற்றை யனுபவிக்கும்படி உபகரித்திருக்கின்றனர். மற்றும் சிலர் வேதங்கள், ப்ரஸ்தானத்ரயம் இவைகளிலுள்ள உயர்ந்த சாஸ்த்ரார்த்தங்களையும், ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளிலுள்ள சிறந்த அர்த்த விசேஷங்களையும் ஒன்று சேர்த்துப் பிணைத்து தமிழ் பாஷையில் ஸூத்ரங்கள் எழுதியுள்ளார்கள். அவற்றிற்கு ரஹஸ்யங்கள் என்று பெயர். இவ்விரண்டு உபகாரங்களும் தமிழ் பாஷை தெரிந்தவர்களுக்கு மட்டுமே உதவுகின்றன. தமிழ் பாஷை தெரியாதவர்களுக்கு உபகாரமாக மற்றும் சில ஆசாரியர்கள் ஸம்ஸ்கிருத பாஷையில் அழகிய ஸ்தோத்ரங்கள் அருளி, திவ்யப் பிரபந்தங்களில் உள்ள அர்த்த விசேஷங்களை அவற்றில் எடுத்துக் கூறியிருக்கின்றனர். இரண்டொரு உதாரணம்;

நம்மாழ்வார் பகவானுடைய முககாந்தியை "முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ" [எம்பெருமான் திருமுடியில் கிரீடமென்பதை யணிந்துகொண்டிருந்தும் அதன் பொருத்த மிகுதியைக்கண்ட ஆழ்வார் திருமுகமண்டலத்தின் சோதியே கிரீடமாகக் காண்கிறதோவென்று உல்லேகித்தபடி.] இவ்வழகிய உல்லேகத்தை தமிழ் பாஷை தெரியாதவர்களும் அனுபவிக்கும்வண்ணம் அப்படியே ஸம்ஸ்கிருத ச்லோகத்தில் வைத்து பட்டர் என்ற ஆசாரியர் தாம் அருளிய ஒரு ஸ்தோத்ரத்தில் "**கிரீடசூடரத்னராஜிராதி ராஜ்யஜல்பிகா, முகேந்துகாந்திருன்முகம் தரங்கிதேவ ரங்கிண:**" என்ருர். நம்மாழ்வாரின் பாசுரத்திற்கு இந்த ச்லோகம் நேரான மொழிபெயர்ப்பு.

இம்மாதிரியே திருமங்கையாழ்வார் தமது பெரிய திருமொழியில் தசாவதாரத்தை வருணிக்கும் சந்தர்ப்பத்தில் மத்ஸ்யாவதாரத்தைப்பற்றிக் கூறுகையில் ஒரு அபூர்வ தமிழ் விருத்தத்தில் பாசுரம் அமைத்துள்ளார். அது வருமாறு:

**நிலையிடமெங்குமின்றி நெடுவெள்ளமும்பர் வளநாடுமூடஇமையோர்**
**தலையிடமற்றெமக்கோர் சரணில்லையென்ன அரணாவனென்னுமருளால்**
**அலைகடல்நீர்குழம்ப அகடாடஓடி அகல்வானுரிஞ்சமுதுகில்**
**மலைகளை மீதுகொண்டுவருமீனைமாலை மறவாதிறைஞ்சென்மனனே.** என்பது

இப்பாசுரத்தையே கூரத்தாழ்வான் தமது ஸுந்தரபாஹுஸ்தவத்தில் மேலே கண்ட பாசுரத்தின் விருத்தத்தையேயமைத்துக் கூறுகிறார்:—

**ப்ரளயஜநீரபூர பரிபூரிதஸ்வ நிலயாவஸன்னவதன**
**ப்ரமதசரண்யபூத சரணார்த்திநாகி சரணம்பவன் ஸ்வக்ருபயா!**
**சலதுததீரிதாம்பு கலுஷீக்ரியாட்ய கமனஸ்வப்ருஷ்டவித்ருதா**
**சலகுல ஏஷ மீனதனுரத்ர ஸுந்தரபுஜோ வநாத்ரிநிலய:** என்று.

நாலாயிர திவ்யப்பிரபந்தங்களுக்குப் போல ஸகல ஸ்தோத்ரங்களுக்கும் நம் ஸ்வாமி விரிவுரைகள் எழுதி வெளியிட்டிருப்பதனால் அவற்றைக்கொண்டு இம்மாதிரியான பல விஷயங்கள் அறியப்படுகின்றன. இச்சுலோகங்களைப் படித்து தமிழ் தெரியாதவர்களும் ஆழ்வார்களின் ஸ்ரீ ஸூக்திரஸத்தை ஒருவாறு அனுபவிக்கலாம். பெரும்பாலானவர்களுக்கு மேலே சொன்ன ஆழ்வார் பாசுரமும், சுலோகமும் மனப்பாடமாயிருந்தாலும் பாசுரங்களை வரிசையாகச் சொல்லும்போது மேலே சொன்ன பாசுரம் ஞாபகம் வரும்; அதேபோல் மேற்கூறிய ஸ்தோத்ரத்தைச் சொல்லும்போது மேலே சொன்ன சுலோகம் நினைவுக்குவரும். ஆனால் நம் ஸ்வாமிக்கோவென்றால் எந்தெந்த பாசுரங்கள் சுலோகமாக்கப்பட்டுள்ளன என்று அவற்றைப் பார்த்த மாத்திரத்திலேயே தெரிந்துவிடும். ஒன்றைச் சொல்லுகையில் மற்றொன்று தானே நினைவுக்கு வந்துவிடும். அவருடைய ஸ்மிருதி சக்தி அதிமானுஷமானது. அவருடைய ஒரு உபன்யாஸத்தைக் கேட்டுத் தெரிந்துகொள்ளும் விஷயங்களை ஒரு வருஷ காலம் புத்தகங்கள் படித்தும் தெரிந்துகொள்ள முடியாது. மேலேகூறிய ஸகல கிரந்தங்களும் ஸ்வாமிக்கு மனப்பாடம்.

இவ்வளவு விஷயங்களிலும் பூர்ணமான ஞானம் படைத்த நம் ஸ்வாமி தன் சாகையான கிருஷ்ணயஜுர் வேதத்தை நன்றாக அத்யயனம்செய்து மூலத்துடன் நில்லாமல் அதன் லக்ஷணத்தையும் நன்கு தெரிந்துகொண்டு வேத பாஷ்யங்களையும் படித்திருப்பது அத்யந்தம் ஆச்சரியகரமானது. இப்படி ஸலக்ஷணம் வேதாத்யயனம் செய்து மேலேகூறிய மற்ற விஷயங்களிலும் பரிபூர்ண ஞானம்பெற்ற வித்வான்கள் நம் ஸ்வாமி ஒருவரைத் தவிர தக்ஷிணதேசம் பூராவிலும் வேறு யாரும் சென்ற சுமார் 200 வருஷ காலத்திற்குள் இல்லையென்று நான் ஆராய்ச்சியின் மூலம் சொன்னால் அது அதிசயோக்தியாகாது. இப்படிப்பட்ட ஸ்வாமியின் உபன்யாஸங்கள் இவ்வூரில் ஒரு வாரம் நடக்கப்போவது இங்குள்ள ஜனங்களின் மாபெரும் பாக்கியம். ... ❋

*Address presented to*

# Jagadacharya Maha Vidvan P. B. Annangaracharíar Swami of Kancheepuram

*by*

## The Citizens of Mysore State

*Learned Swamiji, Ladies and Gentlemen,*

On behalf of the Reception Committee I have great pleasure to welcome you all, to honour Jagadacharya Simhasanadhipathi Mahavidwan Prathivadi Bhayankaram Sriman Annangaracharya Swami of Kanchipuram, who is visiting Bangalore after a lapse of many, many years. It is needless for me to introduce him to you, as he is well known as a great Vidwan throughout India.

His erudition covers Vedas, Vedantas, Ithihasas, Puranas, Divya Prabandham and all kinds of precepts and principles of spiritual learning and excellence. He has travelled several times from Badri in the North to Cape Comorin in the South on a Lecture campaign and has enlightened and enlivened thousands of people. He is highly proficient, to lecture in four languages, Sanskrit, Tamil, Telugu and Hindi. He has also published more than 500 books, in these four languages. He has learnt Kannada also, in his early years but he is out of practice in this language. What many authors have jointly failed to accomplish, our P.B.A. Swami, singly has accomplished to his great credit—the publication of collected volumes of all works of Sri Ramanuja, Sri Nampillai, Sri Vedanta Desika, Sri Manavalamamuni 30 years ago. He has dedicated all his life to spread of Vaishnavism. He has built a Nampillai Temple at Kanchi He is running a Veda Patasala in the same place. He has endowed his property worth about 3 Lakhs as a trust to run the above Institutions for ever, At the age of 78 he is still working more than 18 hours a day and his activity is phenomenal. He dose not take any medicine nor does he consult any Doctor. He can hold thousands of people spell bound for hours together by his eloquence and spiritual brilliance of his lectures. He is a towering spiritual personality. He was given President's Award by Rashtrapathi of India in recognition of his great learning in Ubhaya Vedanta. He has been honoured by Andhra and Madras and other States. Now Mysore is honouring him. We are all anxious to hear Swamiji and so I will not lengthen my observations and the great events, in his great brilliant career.

I will only read out to you, short cuttings of encomiums showered on him by great learned men.

> "P.B.A. Swami has placed the flowers of Hindu faith under a deep debt of gratitude to him for the valuable services he has rendered to the cause of Hinduism in general and to the Visistadvaita Siddanta, in particular".

W. S. KRISHNASWAMI NAIDU, Retd. High Court Judge, Madras.

> "I know Maha Vidwan P.B.A. Swami for more than 30 years and I can claim a close knowledge of the nature and extent of his works. He is a great personality and his life is a dedicated life for the spiritual advancement of our Community".

S. VARADACHARI, Retd. Federal Court Judge.

> "If there is one person who has attained and achieved in a large measure the three objects of a true Vaishnavite life, that person is Sri P.B.A. Swami of Kanchipuram. He has carried the banners of Vaishnavas throughout Baratha Varsha. The service he has rendered to the cause of Vaishnavaism is immeasurable".

D. RAMASWAMY IYENGAR, Advocate, Madras.

"I doubt whether there is any other Vidwan like P.B.A. Swami who is impressive and eloquent. Whether well or ill, he will always join the parayana Goshti at Kanchi and this great Kainkaryam to Lord Varada, he will never miss. Above all when we lost hopes of publishing a combined volume of Sri Vedanta Desika's works, P.B.A. Swamy single handed with a firm resolution, accomplished what we could not accomplish From this we learn, that it is impossible to measure P.B.A. Swami's greatness".

V. V. SRINIVASA IYENGAR, Advocate, Madras.

"P.B.A. Swami's annotations of Periyavachan Pillai's works and his elucidations of the gems in Ramayana, these alone are enough for the invaluable services this Swami has rendered to the Vaishnava World. He can be rightly considered as an Avathar of Nampillai who is himself a Jagadacharya.

KARPANGADU VENKATACHAR SWAMI, Madras.

"P. B. A. Swami's knowledge of Vedas, Vedantas, Tharka, Vyakarna and other Sastras is unique and incomparable. He has visited Melkote number of times and given discourses in his inimitable grand style. He has presented a large set of books to our Sanskrit College. I find it difficult to find words to praise his qualities of head and heart.

H. SREENIVASACHARIAR, Principal, Melkote Sanskrit College.

I crave your indulgenee for taking up valuable time and beg to be excused. It is our duty to felicitate him with the numerous encomiums he has received from great men, along with ours and above all on the recognition of his greatness by our Secular Government and for Awarding him the President's Award.

For one week, we are going to have an intellectual feast uniquely and surpassingly. We are fortunate enough to have this rare privilege and on behalf of the reception committee and on behalf of you all, I thank our Swami most sincerely and most devotedly for this, his kind gracious visit. I request you all to come in large numbers and be benefitted by these discourses mentally and spirtually and not to lose a golden opportunity which we may not get again, for Swamiji is too busy every day, and for all the days in the year, having so much of responsible work in his native town, Kanchipuram. We are all thankful to Swamiji for his kind visit and we, the citizens of this State, are grateful to him.

**Dr. N. Anand Alwar, E. N. Sitaraman, R. A. Singra Iyengar,**
Secretaries, Reception Committee.

தமிழக முதலமைச்சர்

## ஸ்ரீ அண்ணாதுரையின் மறைவுக்குப் பரிதாபம்.

எந்த பத்ரிகையை யெடுத்தாலும் கண்ணீர் வெள்ளமும் கதறலுமாய்க் காண்கிற தந்தோ! அவர் பிறந்தவாறும் வளர்ந்தவாறும் காஞ்சீபுரவாசிகளுள் ஒருவனான் நான் நன்கு அறிவேன். பலகால் சந்தித்துப்பேசின பேச்சுக்களை அவர் அதிகார பதவியேற்ற மறுநாளே எனக்கு நினைவூட்டி யெழுதிய அன்புவெள்ளமான கடிதம் "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்து உகும்" என்கிற ஆழ்வார் பாசுரத்தைச் சொல்லிச் சொல்லிக் கதறச் செய்கின்றது. நான் சமாசார பத்திரிகைகளை வாசிப்பதில்லையென்பதை யறிந்த எனது உயிர்நண்பரொருவர் சென்னையிலிருந்து 4-2-69 செவ்வாய்க்கிழமை வெளியிடான சுதேசமித்திரனைக் கொடுத்தனுப்பி இதில் சில வரிகளையாவது வாசிக்க வேணுமென்று தெரிவித்திருந்தார். ஒரு வரியையும் விடத்தோன்றாமல் முழுதும் படித்து முடித்தேன். "இன்று நீ போக என்னெஞ்சமிருபிளவாய்ப் போகாதே நிற்கு மாறே" என்று தயரதன் கதறியதாகக் குலசேகரர் பாடியதைப் பாடி நின்றேன். ... (*)

## ஸ்ரீ வில்லிபுத்தூரில் வைதிகப் பெரியார் இருவரின் பிரிவு.

"கோதை பிறந்தவூர் கோவிந்தன் வாழுமூர், சோதிமணிமாடந் தோன்றுமூர் - நீதியாய், நல்லபத்தர் வாழுமூர் நான்மறைகளோதுமூர், வில்லிபுத்தூர் வேதக் கோனூர்." என்று நாற்றிசையும் போற்ற நின்ற ஸ்ரீவில்லிபுத்தூர்க்குத் திலகமாக விளங்கி யிருந்தவர்கள் விஞ்சிமூர் ஆழ்வாரையங்கார் ஸ்வாமியும் கிடாம்பி திருமலை ஐயங்கார் ஸ்வாமியுமாவர். முந்தினவரை நேற்றை மார்கழி மாதத்திலும், பிந்தினவரை நிகழும் தை மாதத்திலும் இழந்து பரிதபிக்கின்றது ஸ்ரீவைஷ்ணவ வுலகம். முந்தினவரான ஆழ்வார்ஸ்வாமி உபய வேதாந்த ப்ரவர்த்தகராய் விசேஷித்து பகவத் விஷய ரஹஸ்யாதிகளில் ஆழ்ந்த ஞானம் பெற்று திருக்குறுங்குடி மடத்தில் பலவாண்டுகள் ஆஸ்தான வித்வத் பதவியிலமர்ந்திருந்தவர். (73 திருநக்ஷத்ரம்.) பிந்தினவரான திருமலை ஐயங்கார் ஸ்வாமி க்ரமாந்தம் வேதாத்யயனம் செய்து ஸ்ரீவில்லிபுத்தூரில் வேதபாராயண கோஷ்டியை நிர்வஹித்து வந்தவர். (77 திருநக்ஷத்ரம்.) இவ்விரு பெரியாருடையவும் ஸ்தானம் பூர்த்தி செய்ய முடியாததாகவே நிற்கிறது. ... ... ... *

## ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி.

108. ஸ்ரீராம மஹாக்ரதுவிசேஷங்களையும் க்ரதுஸ்தம்ப ப்ரதிஷ்டைகளையும் ஸமாப்தி செய்துகொண்டு ஸ்ரீஜீயர்ஸ்வாமி தற்காலம் திருவரங்கம் பெரிய கோயிலில் எழுந்தருளி யிருக்கிறபடி. அத்தலத்தில் சிலவாண்டுகட்கு முன்பு ஜீயர் ஸ்வாமி தாம் தொடங்கிவைத்த உபய வேதாந்த ப்ரவர்த்தன ஸாப்தாஹிக ஸதஸ்ஸுக்கு நான்காவதாண்டு பூர்த்தி மஹோத்ஸவத்தை சென்ற ஜனவரிமாத முடிவில் மூன்று நாள் சிறப்பாக நடப்பித்து வித்வான்களுக்கு ஸன்மான மளித்தருளினர்.

---

# சென்னை பக்தமணி கொப்பரம் நடேச செட்டியாரின் ஷஷ்டியப்தபூர்த்தி

நேற்று மார்கழிமாதத்தின் முடிவில் சித்திரை நக்ஷத்திரத்தில் இந்த பக்த மணிக்கு அறுபதாண்டு நிறைவு விழா ப்ராப்தமாயிற்று. 1969 ஆ ஜனவரிமீ 10, 11 தேதிகளாகிய இரண்டு நாட்களில் பாராயண விசேஷங்களும் திவ்ய ப்ரபந்த ஸேவைசாத்துமுறைகளும், விசேஷித்து ஸுதர்சன ஹோமமும் நடைபெற்று ஆசீர்வாத கோஷ்டி மிகச் சிறபபாக நடந்தது. வித்வான்களுக்கு ஸன்மானமும் சிறப்பாகச் செய்யலாயிற்று.





இந்த பக்தமணி நமது ஸத்காலக்ஷேப ஸபையில் ஆதியிலிருந்தே அத்தாணிச் சேவகராக ஈடுபட்டிருப்பவராதலால், அன்றிரவு நமது திருப்பாவை காலக்ஷேப ஸபையில் ஸ்ரீமதுபயவே. K. S. சம்பகேசய்யங்கார் (Advocate) ஸ்வாமியின் தலைமையில் இவர்க்குப் பாராட்டு விழா நடந்து ஸபையின் தலைவர்கள் இவர்க்குச் சிறந்த மரியாதை செய்தார்கள். அச்சமயத்தில் இவர்க்கு நாம் ஞான பக்தி நிதி யென்று விருதளித்தோம். இவருடைய குடும்பம் நீங்காத செல்வம் நிறைந்து வாழ்க.

# தேசிக—சிஷ்ய ஸம்வாதம்.

ஸ்ரீதேசிகன் பக்கலில் ஒரு சிஷ்யர் ஜிஜ்ஞாஸுவாய்ச் சிலபல விஷயங்களை வினவுவதும், அதற்கு தேசிகன் விடையிறுப்பதுமாக வைத்துச் சில தத்வார்த்தங்கள் உணர்த்தப்படுகின்றன.

## (நற்பொருளெழுநூறின் முடிவான ஏழாவது நூறு.)

601. (சிஷ்ய.) இன்று ஸ்வாமியின் திருவடிவாரத்தில் சிலபல ஸந்தேஹங்களை விஜ்ஞாபித்துப் பரிஹாரம் பெறவேண்டி விடைகொண்டிருக்கிறேன். கள்ளங்கவடின்றிக் கேட்கிறேன்; ஆர்ஜவத்துடன் கேட்கிறேன். பரமக்ருபையுடன் அடியேனுடைய கலக்கங்களை சமிப்பித்தருளவேணும். ஸ்வாமி யருளிச்செய்த ஸ்தோத்ர பாஷ்யத்தை ஸேவித்து வருகிறேன். அதில் முதல் சுலோகத்தில் *ஜ்ஞான வைராக்ய ராசயே* என்றவிடத்தில் **வாரிராசி:, ஜலராசி:** இத்யாதிஸ்தலங்களிற்போல ஜ்ஞான வைராக்யங்களுக்கு ராசியாயிருப்பவர் என்கிற பொருள் ஸங்கதமாயும் ஸர்வ ஸம்மதமாயுமிருக்க "அசிந்த்யத்வாதி விசிஷ்டௌ ஜ்ஞாநவைராக்யராசீ யஸ்ய இதி பஹுவ்ரீஹிர் வா" என்று ஸ்வாமி ஸாதித்திருக்கிறதே, இது எதற்காக?

602. (தேசிக.) பிள்ளாய்! எந்த க்ரந்தங்களுக்குப் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம் அவதரித்திருக்கிறதோ, அந்த க்ரந்தத்திற்கு நான் வியாக்கியானமிட்டால் அப்போராசிரியரின் வியாக்கியானத்தை ஸேவித்து அதைத் தழுவியேதான் விவரணம் செய்வது வழக்கம். 'தயாம்புராசி:—க்ருபாஜலநிதி:' போன்ற இடங்களில் பஹுவ்ரீஹி ஸமாஸம் பண்ண இயலாது; ப்ரக்ருதஸ்தலத்தில் முன்னே விசேஷணங்களிருக்கையாலே பஹுவ்ரீஹி பண்ண ஔசித்யமிருந்தது; ஸ்வாமி தமது வியாக்கியானத்தில் அப்படியே பஹுவ்ரீஹியை விவக்ஷித்து, ராசிபதத்தை ஸமூஹார்த்தகமாகக்கொண்டு ஜ்ஞான ஸமூஹங்களையும் வைராக்ய ஸமூஹங்களையுமுடையவர் (நாதமுனிகள்) என்றருளிச் செய்திருக்கையாலே அதைத் தழுவினேன் நான்.

603. (சிஷ்ய.) ஸாமாந்யத: ஞானத்தையும் வைராக்யத்தையும் ஏகவசனத்தால் தானே நிர்தேசிப்பது வழக்கம்; 'பகவத: ஜ்ஞானம் அத்புதம்' 'ஆசார்யஸ்ய வைராக்யம் அப்ரமேயம்' என்கிறார்களேயொழிய (ஜ்ஞாநாநி, வைராக்யாணி) என்று சொல்லுவதில்லையே; இது மேட்டுமடையாகத் தோன்றுகிறதே.

604. (தேசிக.) அப்பா! கண்மூடித்தனமாய் ஸஹஸா அப்படிச் சொல்லிவிடாதே; பெரியவாச்சான் பிள்ளை ஸாதித்தாரென்றால் அது வேதத்தினும் மேம்பட்டது காண். இன்று நீ செய்கிற சங்கையை ஸ்வாமியே திருவுள்ளத்திற்கொண்டு [அதாவது ஜ்ஞானமும் வைராக்யமும் ஏகவசனவாச்யமாயிருக்க தேஷாம் ராசி: யஸ்ய என்னலாமோ? என்று சங்கித்துக்கொண்டு] "பகவத்ஸ்வரூபாதிகள் ஜ்ஞான விஷயங்களாகையாலே ஞானங்கள் பல; த்யாஜ்ய விஷயங்களும் பலவாகையாலே தத்தத்விஷயக வைராக்யத்தையும் பலவாகச் சொல்லலாம் என்று ஸாதித்தருளியிருக்கிறாரே. நானும் அதையே தழுவி "ஜ்ஞான

வைராக்யயோ: ப்ரத்யேகம் விஷயாநந்த்யேந பேதம் அநுஸந்தாய ராசித்வக்ல்ப்தி:'' என்றெழுதியிருக்கிறேனே.

605. (சிஷ்ய.) ஸமாஹிதனுனேன். அடியேனுக்குப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானம் கிடைக்கவில்லை: ஸ்வாமி பாஷ்யத்தைமட்டுமே ஸேவித்து வருகிறேன். ஸ்வாமி பாஷ்யத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமே மூலாதாரம் என்பதைத் தெரிந்துகொண்டேன். இன்னமும் விஜ்ஞாபயே; அந்த முதல் சுலோகத்திலேயே *அகாத பகவத் பக்தி ஸிந்தவே* என்ற விடத்தில் பக்திக்குக் கடலாயிருப்பவர் நாதமுனிகள் என்று இவ்வளவே ஸ்வரஸமாகக் கொள்ளலாமாயிருக்க ''பக்திம் வா ஸிந்துத்வேந ரூபயித்வா பஹுவ்ரீஹி:'' என்று ஸ்வாமி ஸாதித்திருப்பது எதனுலே?

606. (தேசிக:) பிள்ளாய்! முன்னமே சொன்னேனே; பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானந்தான் எனக்குத் தஞ்சம். அவர் தம்முடைய வியாக்கியானத்தில் பக்தியைக் கடலாக ரூபித்து அகாதமான பகவத் பக்தி ஸிந்துவையுடையவர் என்று பொருளருளிச் செய்திருக்கிருர். தயாஸிந்து:, க்ஷமாஸாகர: இத்யாதிஸ்தலங்களில் பஹுவ்ரீஹி ஸமாஸங்கொள்ள இயலாது; இங்கு விசேஷணஸத்பாவாத் பஹுவ்ரீஹிக்கு அநுபபத்தியில்லாமையாலே ஸ்வாமி அப்படி திருவுள்ளம்பற்றினுர்; அதையே தழுவினேன் நானும்.

607. (சிஷ்ய.) ஸ்வாமிந்! ''பஹுவ்ரீஹிக்கு அநுபபத்தியில்லாமையாலே'' என்று தேவரீர் ஸாதிப்பது உசிதமாகத் தோன்றவில்லை; இங்கு பஹுவ்ரீஹிக்கு ஸ்வாரஸ்யாதிசயமிருப்பதனுலே என்று ஸாதிக்கவேணும். என்ன ஸ்வாரஸ்யாதிசயமென்னில்; ஆழ்வார் *காதல் கடல் புரைய விளைவித்த* என்றும் *காதல் கடலின் மிகப்பெரிதால்* என்றும் பக்தியைக் கடலாகவருளிச்செய்திருக்கையாலே அதற்குச் சேர பக்தியை ஸிந்துவாக ரூபித்தருளினுர் என்று சொல்லுவது அழகியதல்லவா? *ஜ்ஞாந வைராக்ய ராசயே* என்ற விடத்திலும் *பலபலவே யாபரணம்* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் *பலபலவே ஞானமும்* என்று ஞானங்களைப் பலவாகவும், *பலபல கண்டுண்டு கேட்டுற்று மோந்தின்பம்* என்று வைராக்ய விஷய பூதங்களான இந்த்ரிய ஜந்ய ஸுகங்களைப் பலவாகவும் ஆழ்வாரருளிச்செய்திருக்கையாலேயே பெரியவாச்சான் பிள்ளை ஞான வைராக்யங்களை ராசியாகவருளிச்செய்தாரென்று நினைக்கிறேன். இவற்றை தேவரீர் குறிக்கொண்டருளவேணும். வெறுமனே பெரியவாச்சான்பிள்ளை அருளிச் செய்தாரென்றுமட்டும் கொள்ளாமல் அதற்கு நிதானமும் அறிந்துகொள்வது சிறந்ததல்லவா?

608. (தேசிக.) உண்மையில் இதை நான் குறிக்கொள்ளவில்லை; உன்னை நான் மிக ப்ரபுத்தனுக நினைக்கிறேன். கேவலம் ஜிஜ்ஞாஸுவாகமட்டும் உன்னை நான் நினைப்பதற்கில்லையே. இப்போது நீ யெடுத்துக் காட்டின பாசுரங்கள் எவ்வளவோ பாக்யவசத்தாலன்றோ தோன்றியிருக்கவேண்டும். இன்று உன்னோடு நான் ஸம்பாஷிப்பது எனக்கும் லாபகரமென்று நான் போரவுகக்கிறேன். இன்று பரமரஸிகனுனவுன்னோடு போதுபோக்கப்பெறுவது எனக்குப் பேரின்ப வெள்ளம்! இன்னமும் கேள்.

609. (சிஷ்ய.) ஸ்தோத்ர பாஷ்யத்திலேயே மண்டூகப்லுதிந்யாயேந சிறிது மேலே சென்று விஜ்ஞாபிக்கிறேன். (ச்லோ. 45.) *அசிந்த்ய திவ்யாத்புதேத்யாதியில் *பக்த ஜநைக ஜீவிதம்* என்பதற்கு 'பக்த ஜநாநாம் ப்ரதாந ஜீவிதம்' என்று பொருள் செய்ததோடு நில்லாமல் "பக்தஜநா ஏவ ஜீவிதம் யஸ்ய ஸ:" என்று பஹுவ்ரீஹியும் செய்தருளியிருக்கிறதே, இதுவும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தைப் பின் சென்றுதானோ?

610. (தேசிக.) கேட்கவேணுமா? எம்பெருமான் கீதையில் *யத்யத் விபூதிமத் ஸத்வம் ஸ்ரீமதூர்ஜிதமேவ வா, தத்ததேவாவகச்ச த்வம் மம தேஜோம்சஸம்பவம்* என்றாப்போலே என்னுடைய நூல்களில் சுவைமிக்கதாகக்காணும் பொருள்கள்யாவும் பெரியவாச்சான்பிள்ளை யருளியவையே யென்று திண்ணமாக எண்ணுவாயாக. ஸ்வாமி தமது வியாக்கியானத்தில் "[பக்த ஜநைக ஜீவிதம்] *எல்லாங்கண்ணன்* என்கிறபடியே ஆச்ரிதர்களுக்கு தாரகாதிகளெல்லாம் தானேயாயிருக்குமவனை" என்றருளிச்செய்த வுடனே "பக்த ஜனங்களையே தனக்கு தாரகமாகவுடையவன் என்னவுமாம்; *மம ப்ராணா ஹி பாண்டவா:*" என்று ப்ரமாணோபந்யாஸ பூர்வகமாக அருளிச்செய்திருக்கையாலே, அதில் நான் சுவை கண்டு அப்பொருளையும் ஆதரித்தேன். *மம ப்ராணா ஹி பாண்டவா:* என்று ஸ்வாமி காட்டியருளின ப்ரமாணத்தையும் காட்டியுள்ளேன்: *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்* என்கிற ப்ரமாணத்தையும் மற்றோரிடத்தில் ஸ்வாமி காட்டி யருளியிருக்கையாலே அதையும் இங்கெடுத்துக் காட்டியுள்ளேன்.

611. (சிஷ்ய.) "மற்றோரிடத்தில் ஸ்வாமி காட்டியருளியிருக்கையாலே" என்று ஸாதிக்கிறதே, அந்த மற்றோரிடம் எது? அடியேனறிந்துகொள்ள முடியுமா? திருவருள் செய்ய இயலுமா?

612. (தேசிக.) என்ன தடை? கீதையில் கண்ணபிரான் முடிவில் *இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசந, ந ச அசுச்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோப்ய ஸூயதி* என்றான். நீ அப்படி அதபஸ்காதி கோஷ்டியில் சேர்ந்தவனல்லையே; உத்தமாதிகாரியாகையாலே உனக்கும் சொல்லாமல் மறைக்கவேண்டியதுமுண்டோ? குனிந்து கேள். திருவாய்மொழியில் (6—9—8) *அறிவிலேனுக்கருளாய்* என்கிற பாட்டிலே *அறிவாருயிரானாய்* என்னுமிடத்திற்கு ஆறாயிரப்படியில் பிள்ளான் ஜ்ஞானிகளுக்கு உயிரானவனே! என்கிற பொருள்மட்டுமே அருளிச்செய்திருக்கவும், நம்பிள்ளை திருவடிகள் *ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்* என்கிற கீதாவசனத்தை யெடுத்துக்காட்டி 'அறிவாரை உயிராகவுடையவனே!' என்னும் பொருளையுமருளி யுள்ளார்கள். அதை ஸேவித்ததுமுதல் அவ்வர்த்தம் என்னுள்ளத்துள் தேனூறித் தித்தித்திருக்கின்றது. "என்னதுன்னதாவியிலே அறிவாராத்மாவென்று அவன் மதம் தோன்றும்" என்கிற ஆசார்யஹ்ருதய திவ்யஸூக்தியும் சிந்தைதன்னுள் நீங்காதிரா நின்றது. ஆகவே *பக்த ஜநைக ஜீவிதம்* என்றவிடத்தில் அதையெல்லாம் நினைத்தே *ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்* என்கிற ப்ரமாணத்தையுமுதாஹரித்தேன். இதுவே மற்றோரிடம்.

613. (சிஷ்ய.) ஸ்வாமிந்! தேவரீர் பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங் களில் அளவுகடந்த அநுபவம் கொண்டிருப்பதாக நினைக்கிறேன். பல பெரியார்கள்

இங்ஙனே சொல்லக் கேட்டிருந்தேன்; "ஸம்ப்ரதி ஸந்தேஹ நிர்ணயோ ஜாத:." பெரிய வாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகளை தேவரீரைப்போல் உபஜீவித்த ஆசாரியர் வெறொருவரிருப்பரென்று எனக்குத் தோன்றவில்லை.

614. (தேசிக.) அப்படியன்றப்பா; எம்பெருமானுர் "த்ரோணுசார்யர்க்கு ஏகலவ்யன்போல ஆளவந்தாருக்கு நான்" என்றருளிச்செய்தாப்போலே "பெரிய வாச்சான்பிள்ளைக்கு நான்" என்று இறுமாப்புடன் சொல்லிக்கொள்ளத் தட்டில்லை.

615. (சிஷ்.) இடையில் ஒரு ஸந்தேஹம் விஜ்ஞாபிக்கிறேன். "ஆளவந்தாருக்கு நான் (ஏகலவ்யன்)" என்னுமைதிஹ்யம் நவீநகல்பிதமென்கிறார்களே; இப்போது தேவரீர் திருவாக்கில் வந்ததேபோதும்; இதில் அடியேனுக்கு ஸந்தேஹமுண்டாவதற்கே ப்ரஸக்தியில்லை. ஆனாலும் கல்பிதத்வப்ரவாதம் ப்ரபலமாயிருப்பதால் வினவ வேண்டியதாகிறது. ஸாதிக்கவேணும்.

616. (தேசி.) கல்பிதமென்பவர்கள் இதொன்றைத்தானு கல்பிதமென்கிறார்கள்? ராமாயணம் கல்பிதம், பாரதம் கல்பிதம், பாகவதம் கல்பிதம், எல்லாம் கல்பிதம். இவர்களுடைய வாக்கு ஒன்றுதான் வேதம். வேதமும் கல்பிதம். பாஷ்யகாரரருளிச் செய்த கீதாபாஷ்யத்தின் முகப்பில் *யத்பதாம்போருஹத்யாந... . *என்கிற (ஆளவந்தார் விஷயமான) சலோகத்திற்கு என்னுடைய பாஷ்யம் ஸேவித்ததில்லையோ நீ? "த்ரோணு சார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹம்—இத்யபிப்ராயேண த்யாநசப்த:" என்றெழுதியிருக்கிறேனே, இதையும் கல்பிதமென்கிறார்களோ?... ..... அவர்கள் தொலையட்டும். மேல் விஷய சர்ச்சையை நடத்து நீ.

617. (சிஷ்) கீழே *பக்தஜநைகஜீவிகம்* என்றவிடத்திலன்றே சர்ச்சை தொடங்கி நடந்தது. அதற்கடுத்ததும் (ஸமர்த்தம்) என்பது. அதற்கு தேவரீருடைய பாஷ்யத்தி லுள்ள பங்க்தி செவ்வனே விளங்கவில்லை. "ஸ்வார்த்தபோகப்ரதாநே" என்று சிலர்; "ஸ்வாத்மபோகப்ரதாநே" என்று சிலர்; உண்மையான பாடத்தை ஸ்வாமி திருவாக்கி னலேயே ஸாதிக்கக் கேட்க விரும்புகிறேன்.

618. (தேசி.) பாடஸந்தேஹமுள்ளவிடத்தில் பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானத்தையெடுத்து ஸேவித்தால் பளிச்சென்று விளங்குமே. நீ கேட்குமிடத்தில் பிள்ளையருளிச்செய்த வியாக்கியானத்தில் "[ஸமர்த்தம்] அளவுடையரான நித்யஸூரிகள் அனுபவிக்குமவனை நித்யஸம்ஸாரிகள் அநுபவிக்கும்படி .......ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்கும் ஸாமர்த்த்யத்தையுடையவுனை" என்றுள்ள ஸ்ரீஸூக்திகளைத் தழுவி "ஆச்ரிதாநாம் ஸாத்ம்யபோகப்ரதாநே ஸமர்த்தம்" என்றெழுதினேன். (ஸ்வார்த்த) என்றோ (ஸ்வாத்ம) என்றோ இங்கு நினைக்கவும் ப்ரஸக்தியில்லையே.

619. (சிஷ்ய.) ஸ்வாமி ஸாதிப்பது ஸரி. ஸ்வாமியினுடைய திவ்யஸூக்திகளில் வேறு எந்த இடத்திலும் (ஸாத்ம்ய) என்கிற பதப்ரயோகம் காணவில்லையென்றும், இது அர்த்தமில்லாத சப்தமென்றும், எந்த கவியும் இந்த பதத்தை ப்ரயோகித்திருக்கக் கண்டதில்லையென்றும் சொல்லுகிறார்களே; தெளிவு பெறுமாறு ஸாதித்தருளவேணும்.

620. (தேசிக.) மாணீ! அவஹிதனுய்க்கேள். திருவாய்மொழி முதற்பத்தில் *இவையுமவையும்* என்கிற பதிகத்திற்கு பிள்ளான் ஆருயிரப்படியில் "இப்படி எம்பெருமான் என்னோடு ஸம்ச்லேஷித்தருளினுனென்கிறுர்" என்றிவ்வளவே அவதாரிகையுள்ளது. பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படியில் "......ஸாத்மிக்கும்படியாக ஸம்ச்லேஷிக்க அத்தையநுபவித்து ப்ரீதராகிறுர்" என்று அருளிச்செய்யப்பட்டுள்ளது. மிகப்பொருத்தமான அதையநுஸரித்து நான் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவலியில் *விபு மநுபுபுஜே ஸாத்ம்யபோகப்ரதாநாத்* என்றும், மேலே சதகார்த்தஸங்க்ராஹக ச்லோகத்திலும் *ஸாத்ம்யபோகப்ரதத்வாத்* என்றும் எழுதிவைத்திருக்கிறேன். (ஸாத்ம்ய) என்கிறபதம் அப்ரஸித்தமன்று; ஆருயிரப்படியிலும் ஏறியுள்ளது. சரகஸுச்ருதாதிகளில் ப்ரஸித்தமான இந்த பதத்தைப் பிள்ளை விசேஷித்துக் கையாளுகிறுர். அவர் திருவடிகளையே தஞ்சமாகக்கொண்ட நானும் அதைக் கையாண்டுவருகிறேன்.

621. (சிஷ்ய.) தேவரீருடைய திவ்யஸூக்திகளை அடியேன் மிகமிக ஆழ்ந்து பரிசீலனை செய்திருக்கிறேனுதலால் ஒன்று கேட்கிறேன்; சில அர்த்தங்களையருளிச்செய்து **"இதி ஆசார்யா:"** என்று சிலவிடங்களிலும், **"இதி கேசிதாசார்யா:"** என்று சிலவிடங்களிலும் அருளிச்செய்திருக்கக் காண்கிறேன்; **ஆசார்யா:** என்றவிடத்தில் **விவக்ஷிதரான** ஆசார்யர் யார்? "கேசிதாசார்யா:" என்றவிடத்தில் **விவக்ஷிதர்கள்** யாவர்?

622. (தேசிக.) மாணீ! இப்படி கேட்டுவிட்டால் நான் எப்படி விடைகூறுவது? நானோ அபரிமிதங்களான க்ரந்தங்களை யெழுதியிருக்கிறேன். இன்ன இடத்தில் இன்னவிதமாக எழுதியிருக்கிறேனென்பது திடீரென்று எனக்கு நினைவுக்கு வருமா? அந்தந்த இடங்களை யெடுத்துக்காட்டிக் கேட்டாயாகில் சொல்லத் தட்டில்லை. **'இதி ஆசார்யா:'** என்று எங்கே யெழுதியிருக்கிறேனென்பதை முன்னஞ்சொல்லு.

623. (சிஷ்ய.) இதோ விஜ்ஞாபிக்கிறேன். ஸச்சரித்ரரக்ஷையில் ஊர்த்வபுண்ட்ர விசாரபரமான இரண்டாமதிகாரத்தில்—*கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும் பெரிய கோலத்தடங்கண்ணன்* (4-5-6.) என்ற திருவாய்மொழிப் பாசுரத்தில் 'வெளியநீறு' என்றதைப்பற்றி சைவர்கள் ஏதோ ஆக்ஷேபம் செய்தாப்போலிருக்கிறது; அதற்கு விடையிறுக்கப் புகுந்த தேவரீர்—"சக்ஷுஷி தத்தாரணம் தத்ர விஹிதமிதி அஞ்ஜந பரத்வமாஹுராசார்யா:" என்று ஸாதித்திருக்கிறது. **"கேசிதாசார்யா:"** என்று ஸாதித்திருக்குமிடத்தைப் பிறகு விஜ்ஞாபிக்கிறேன்; இவ்விடத்தில் ஆசார்யராக விவக்ஷிதர் யாவரென்று ஜிஜ்ஞாஸே.

624. (தேசிக.) அருளிச்செயல் பொருளையாராய்ந்து எழுதுமிடத்தில் (ஆசார்யா:) என்றால் பெரியவாச்சான்பிள்ளையைத் தவிர்த்து வேறோராசார்யரைக் குறிப்பதற்கு ப்ரஸக்தியேது? ப்ரக்ருதமான பாசுரத்திற்குப் பிள்ளானுடைய ஆருயிரப்படி வியாக்கியானத்தில் (வெளியநீறு) என்பதற்கு திவ்யாங்கராகமென்று பொருள் கொள்ளப் பட்டிருப்பது தவிர *கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்* என்கிற முதலடி முழுவதும் எம்பெருமானுக்கு விசேஷணமாக்கி யுரைக்கப்பட்டுள்ளது. ஆசார்யரான பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்துநாலாயிரப்படியில் (வெளிய நீறு) என்றவிடத்து

வெளியம் என்று பிரித்து அதற்கு அஞ்ஜனமென்று பொருள் கொண்டு, முதலடியை எம்பெருமானுக்கு விசேஷணமாகக் கொள்ளாமல் (இரண்டாமடியில்) *பெரியகோலத் தடங்கண்ணன்* என்றதன் ஏகதேசமான திருக்கண்களுக்கு விசேஷணமாகக்கொண்டு 'திருக்கண்களின் கருவிழியினுடைய கறுத்தநிறத்தின்மேலே அஞ்ஜனசூர்ணமுமணியப் பெற்ற திருக்கண்களையுடையவன்' என்னும் தாற்பரியம் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் காண்பது வாதி விஜயத்திற்கு மிகவும் உபயுக்தமாயிருந்தபடியாலே "சக்ஷுஷி தத்தாரணம் தத்ர விஹிதமிதி அஞ்ஜந பரத்வமாஹுராசார்யா:" என்றெழுதினேன். ஸமாஹிதனாயா?

625. (சிஷ்.) ஸ்வாமிந்! இங்குச் சிலர் சொல்லுவதென்னவென்றால், "நீறுபதஸ்ய அஞ்ஜந பரத்வம், சக்ஷுஷி தத்தாரணஞ்ச உச்யதே, ந து த்வதபிமதம் வபுஷி பஸ்ம தாரணம்" என்று தேவரீருடைய திருவுள்ளமாகவே யெழுதியிருக்கலாமே; பிள்ளான் ஸ்ரீஸூக்தியை உபேக்ஷித்திருப்பதை வெட்டவெளிச்சமாகக் காட்டியிருப்பதும், பெரியவாச்சான்பிள்ளையை ஆசார்யரென்று சிறப்பித்தெழுதியதும் வேண்டாமே என்று.

626. (தேசி.) ஆர்ஜவத்தைவிட்டுக் குடிலமானவழியிற் செல்லுவது எனக்குப் பிடிக்காது. பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தைக் காலக்ஷேப முறையில் தனியனையநுஸந்தித்து அதிகரித்த நான் (ஆசார்யா:) என்றெழுதாமல் வேறுவிதமாக எழுதியிருந்தேனாகில் ஆசார்யத்ரோஹ பாபியாகமாட்டேனா? யதிராஜஸப்ததியில் ஆளவந்தாருக்கு நானிட்ட சுலோகம் உனக்குத் தெரியுமே, [*விகாஹே யாமுநம் தீர்த்தம் ஸாதுப்ருந்தாவநே ஸ்திதம், நிரஸ்தஜிஹ்மகஸ்பர்சே யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:*] என்பது. இது ச்லேஷாலங்காரத்தில் வைத்துப் பேசினது. (யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:) என்ற சரமசரணத்தில் **க்ருஷ்ண:** என்பதற்கு யமுநாதீர்த்தபக்ஷத்தில் கண்ணனென்கிற பொருள் பொருந்திற்று. யாமுநாசார்யபக்ஷத்திலும் அந்தப் பொருளையே கொள்வதானால், நீரஸமான அது என்னுடைய கவித்வமாகுமோ? நாநார்த்தஸம்ச்ரயமாக இருக்க வேண்டாவோ? பெரியவாச்சான்பிள்ளையின் தனியன் *ஸ்ரீமத் க்ருஷ்ண ஸமாஹ்வாய* இத்யாதியன்றோ? (யத்ர க்ருஷ்ண: க்ருதாதர:) என்றவிடத்தில் க்ருஷ்ணஸமாஹ்வரான பெரியவாச்சான்பிள்ளையையன்றோ விவக்ஷித்திருக்கிறேன். யாமுநார்யா நுக்ருஹீதமான ஸ்தோத்ரரத்னத்திற்கு அற்புதமான வியாக்கியானத்தை யருளிச்செய்யும் முகத்தாலே அவரிடத்தில் ஆதரம் காட்டினவர் க்ருஷ்ணஸமாஹ்வரான பெரியவாச்சான்பிள்ளையே யன்றோ? இப்பொருளைவிட்டால் வேறு பொருள் ஏற்குமோ?

627. (சிஷ்.) ஸ்வாமிந்! இன்று அபூர்வலாபம் பெற்றேன். தேவரீருடைய சில்லரை ரஹஸ்யங்களில் ரஹஸ்யமாத்ருகையென்னும் ரஹஸ்யத்தின் முடிவில் "விசுத்த தேசிகவதா ரங்கதாம்நி வ்யலிக்க்யத" என்றருளிச் செய்திருப்பதில் நெடுநாளாக இருந்த ஸந்தேஹமும் இன்று தீர்ந்தது. தேவரீர் ஸ்ரீரங்கத்திற்கெழுந்தருளி விசுத்தாசார்ய ஸம்பந்தம் பெற்றதாக இதில் ஸ்பஷ்டமாகத் தெரிவதனால் அந்த விசுத்தாசார்யர் யாவர்? என்று பலர்க்கு ஜிஜ்ஞாஸையுண்டு. ஸ்வாமி திருவாக்கிலிருந்தே தெரிந்துகொள்ள வேணுமென்று அடியேன் விரும்பியிருந்தேன். இப்போது தைவாதீனமாக ப்ரஸக்தி ஏற்பட்டுவிட்டபடியால் கேட்கிறேன் ஸாதிக்கவேணும்.

628. (தேசி.) மாணீ! கேளாய்; நான் ஸ்ரீரங்கம் சென்ற காலத்தில் பெரிய வாச்சான் பிள்ளை திருநாடலங்கரித்தாயிற்று; பிள்ளை லோகாசார்ய ச்ருதப்ரகாசிகாசார்ய ப்ரப்ருதிகள் நம்பெருமாளுடைய ரக்ஷணார்த்தமாக வெளியேறியிருந்தார்கள். அவர்கள் மீண்டு கோயிலுக்கெழுந்தருள ப்ரஸக்தியில்லாமலே போயிற்று. நானும் நிர்வேதத் துடனே வடகொங்குக்குச் சென்று சேர்ந்துவிட்டேன். [பரமத பங்கத்தின் முடிவில்] "மாதவனுர் வடகொங்கின் வானியாற்றில்" என்றெழுதியிருக்கிறேனே, அதுதான் அந்த ஸ்தலம். அங்கிருந்துகொண்டு அபீதிஸ்தவத்தை நிச்சலும் அநுஸந்தியா நின்று "நிரஸ்த ரிபுஸம்பவே க்வசந ரங்கமுக்யே விபோ பரஸ்பரஹிதைஷிணும் பரிஸரேஷு மாம் வர்த்தய" என்று உருப்போட்டுக்கொண்டிருந்ததன் பலனுக யதாமநோரதம் ஸ்ரீரங்க வாஸம் பெற்றேன். அப்போது பெரியவாச்சான் பிள்ளை திருவடிகளிலும் பிள்ளைலோகா சார்யர் திருவடிகளிலும் ஆச்ரயித்து ஸகலார்த்தங்களும் தெளியப்பெற்றவர்களான பாக்ய சாலிகள் சிலர் கிடைத்தபடியால் அவர்களுடைய திருவடிவாரத்திலே வாழ்ந்து சிலபல அர்த்தங்கள் சிக்ஷிக்கப் பெற்றேன். "ஸ்ரீ பாஷ்யகாரர் திருக்கோட்டியூர் நம்பி பக்கலிலே ரஹஸ்யார்த்தங்கள் **சிக்ஷித்தார்**" என்று நான் குருபரம்பரா ஸாரத்திலெழுதியிருக்குங் கட்டளையிலே சிக்ஷிக்கப் பெற்றேனத்தனை. அப்போதுதான் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானங்களும் ஸேவிக்க ப்ராப்தமாயிற்று. அதையிட்டே *விசுத்ததேசிகவதா ரங்கதாம்நி* என்றும் *ரங்காஸ்தாநே ரஸிகமஹிதே ரஞ்ஜிதாசேஷசித்தே **வித்வத் ஸேவா விமலமநஸா** வேங்கடேசேந* என்றும் உள்கனிந்து எழுதிவைத்தேன்.

629. (சிஷ்ய.) இப்போது ஸ்வாமிதாமே யெடுத்துக்காட்டியருளின *வித்வத் ஸேவாவிமலமநஸா வேங்கடேசேந* என்பது மத்ஸரிகளுக்கும் நல்ல தெளிவைப் பிறப்பிக்குமதாயிருக்க, கிடாம்பியப்புள்ளார் திருவடிகளில் ஸேவை பண்ணினவதுதான் (வித்வத்ஸேவா) என்பதனுல் சொல்லப்படுகிறதென்று சிலர் கூறுவது அஸங்கதந்தானே. ஆசார்யஸார்வபௌமரான அப்புள்ளாரை ஆசார்ய சப்தத்தால் நிர்தேசியாமல் வித்வச் சப்தத்தாலே நிர்தேசிப்பது அஸம்பாவிதம் என்பதைக்கூட அறியாத ஜடங்களுக்கு என்ன சொல்லுவது?

630. (தேசிக.) ப்ராமாணிகனுன நீ உள்ளதை உள்ளபடி தெரிந்துகொண்டால் போதும். ஸச்சரித்ர ரக்ஷையில் (ஆசார்யா:) என்றெழுதியிருப்பது யாரை நோக்கியது? என்று நீ கேட்டதற்கு ருஜுவான விடை கூறினேன். "கேசிதாசார்யா:" என்று நானெழுதியிருப்பதாக ப்ரஸ்தாவித்தாயே; அந்தவிடத்தையும் நினைவூட்டினுல் சொல்லுகிறேன்.

631. (சிஷ்ய.) விஜ்ஞாபிக்கிறேன். கீதை ஏழாமத்யாயத்தில் *ஸ ச மம ப்ரிய:* என்றவிடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில்— "ஸ ச மம ப்ரிய இத்யத்ர நிரதிசயப்ரீதிம் குர்வதோபி மஹோதாரஸ்ய ஈச்வரஸ்யாபி தத்ப்ரீத்யுபாதிகப்ரீதிகரணுத் அத்ருப்திஸ் ஸூசிதேதி கேசிதாசார்யா:" என்று ஸாதித்திருப்பது திருவுள்ளத்தில் நினைவிருக்குமே. இங்கே **கேசித்** என்றதனுல் விவக்ஷிதர் யாவர்? **கேசித்** என்றவளவோடு விட்டிருந்தால் கேள்வியில்லை; 'கேசிதாசார்யா;' என்றிருப்பதனுல் ஜிஜ்ஞாஸை மிகுகின்றது.

632. (தேசி.) நீ கேட்டது யுக்தம். மருமமாகக் கண்டறிந்து கேட்பதுபற்றி மகிழ்கிறேன். சொல்லுகிறேன் கேள். நாச்சியார் திருமொழியில் *தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்கிற பாசுரத்தைக்கொண்டு நம்பிள்ளை திருவடிகள் சிலர் உபந்யஸிக்கையில், கீதையில் (ஸ ச மம ப்ரிய:) என்றவிடத்துள்ள சகாரத்தை ப்ரஸ்தாவித்து "ஜ்ஞானி என் பக்கலிலே செய்யும் ப்ரீதியை உபாதியாக்கி அவன் பக்கலிலே நான் ப்ரீதி பண்ணுகை பெரிதோ?" என்றதாக வார்த்தாமாலையில் கண்டிருந்தேன். ஸச்சரித்ர ரக்ஷையிற்போல் இங்கு (ஆசார்யா:) என்னப் பொருத்தமில்லாமையாலே (கேசித்) என்று கூட்டினேனத்தனை. அது அநாதரோக்தியன்று. வக்த்ருநிர்ணயமில்லாதவற்றில் இங்ஙனே பலவிடங்களில் தமிழிலும் எழுதியிருக்கிறேன். இது க்ராந்திகசைலியுமாகும்.

633. (சிஷ்.) 'கேசிதாசார்யா:' என்றது பெரியவாச்சான்பிள்ளையை விவக்ஷித்ததாயிருக்குமோவென்று அடியேன் எண்ணினேன். அப்படியிருந்தாலும் (ஆசார்யா:) என்றிருக்கையாலே இது அநாதரோக்தியன்று என்றும் அறுதியிட்டேன்.

634. (தேசி.) ரஹஸ்யத்ரயஸாரே ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில் "*குலந்தருமென்கிற பாட்டுக்கு வ்யாக்யானம் பண்ணின **அபியுக்தரும்**" என்று தொடங்கி, பெரியவாச்சான்பிள்ளையின் பெரிய திருமொழி வியாக்கியான பங்க்திகள் பலவற்றை அக்ஷரச: உதாஹரித்து "என்று நிஷ்கர்ஷித்தார்கள்" என்றன்றோ எழுதியிருக்கிறேன். *யே யதா மாம் ப்ரபத்யந்தே தாந் ததைவ பஜாம்யஹம்* என்ற கீதாச்லோகத்திற்கு அர்ச்சாவதார பரத்வம் ஸ்வாமி பாஷ்யத்தில் இல்லாதிருக்கச் செய்தேயும், திருவாய்மொழியில் (8-1-4.) *உமருகந்துகந்தவுருவம் நின்னுருவமாகி* என்கிற பாசுரத்தைப் பெரியவாச்சான்பிள்ளை அர்ச்சாவதாரபரமாக நிர்வஹித்து அதற்கு *யே யதா மாம் ப்ரபத்யந்தே* என்கிற இந்த கீதாவசனத்தை ஸம்வாதப்ரமாணமாகக் காட்டியருளினதுகொண்டே நான் தாத்பர்ய சந்த்ரிகையில் *யே யதா மாம் உபக்ரமத்திலேயே "அத்ர க்ருஷ்ணவதாரவ்ருத்தாந்தேந ஸஹ அர்ச்சாவதாரவ்ருத்தாந்தோபி ஸங்க்ருஹீத' என்று எழுதியிருக்கின்றேன். இங்ஙனே நுட்பமாகக் காணத்தக்க விஷயங்கள் பலவுண்டு. இப்போது அனுஷ்டானத்திற்குச் செல்லவேண்டியிருப்பதால் பிரிந்து பின்னைக் கலந்து பேசுவோம்.

635. (சிஷ்ய.) நியமனப்படியேயாகுக. இன்று நாம் ஸம்பாஷித்தது ஸ்வல்ப காலமேயானாலும் நவநிதிகளைப் பெற்றாற்போல் ஸந்தோஷிக்கிறேன். இன்று ஸ்வாமி திருவாக்கால் அடியேன் கேட்கப்பெற்ற ரஸ்ய ரஹஸ்யார்த்தங்கள் ஒன்பதாகையாலே இவை நவநிதிகளென்னத் தட்டில்லை. நவரத்னங்கள் நிறைந்த நவநிதிகளென்பதில் ஸந்தேஹமில்லை.

636. (தேசிக.) இன்று நீ தெரிந்துகொண்ட விஷயங்கள் ஒன்பதேயல்ல; பத்து பன்னிரண்டுமிருக்கும்; ஆனாலும் ஒரே விஷயமென்று தலைக்கட்டலாம். அதாவது—என்னுடைய உக்திகளில் ரஸகனமாகக் காணுமவையெல்லாம் பெரியவாச்சான்பிள்ளையருளிச்செயல் மூலமானவையேயென்று. அடுத்த ஸம்பாஷணைகளில் அநவதிக ரத்னங்கள் பெறுவாய் ... ... ... ... ... [தொடரும்]

## ஸ்ரீ உ. வே. P. B. அண்ணங்கராசாரியார் சுவாமிகளின் நூல்களுக்கு ஜாபிதா.

### வேதாந்தப்பொருள் விளக்க நூல்கள்

| | | |
|---|---|---|
| விசிஷ்டாத்வைத தரிசனம் | 1 | 00 |
| விசிஷ்டாத்வைத ஸர்வஸ்வம் | 1 | 00 |
| பகவத்கீதையறுபத்திரண்டு | 1 | 25 |
| ஸ்ரீ பாஷ்யாதிகரணமெழுபத்தாறு | 1 | 00 |
| எம்பெருமானார் தரிசனம் | 1 | 00 |
| எம்பெருமானாரறுபத்திரண்டு | 1 | 00 |
| த்ரமிடோபநிஷத்ப்ரபாவஸர்வஸ்வம் | 2 | 00 |
| ராமாநுஜ ஜயந்தி மலர் | 1 | 00 |
| ஸித்தாந்த ஸௌபாக்யம் | 1 | 50 |
| சாரீரகமீமாம்ஸையறுபத்திரண்டு | 1 | 00 |

### ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்

| | | |
|---|---|---|
| ஸத்ஸம்ப்ரதாயார்த்தஸாரநிதி | 3 | 00 |
| ஸத்ஸம்ப்ரதாயார்த்தரக்ஷா | 1 | 00 |
| ஸர்வஜ்ஞஸூக்தி ஸர்வஸ்வம் | 1 | 00 |
| ஸாத்யபக்தி ஸாதநபக்தி சோதனம் | 1 | 00 |
| வைசாகோத்ஸவோபந்யாஸமாலை | 1 | 00 |
| திருவல்லிக்கேணியுபந்யாஸமாலை | 1 | 00 |
| ஜகதப்யுதயைகமூலம் | 1 | 00 |
| சரணாகதிஸாம்ராஜ்யம் | 1 | 00 |
| ராமாநுஜதயாபாத்ர சரித்ரம் | 1 | 00 |
| ஷை ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம் | 1 | 00 |
| பாத்ரபத்யபரமார்த்தம் | 1 | 00 |
| மணவாளமாமுனிவாத்ஸல்யம் | 1 | 00 |
| ஸ்ரீசைலேச மந்த்ரப்ரபாவம் | 1 | 00 |
| அத்புதோபந்யாஸமாலை | 1 | 00 |
| ஐதிஹ்யநிர்வாஹ ரத்னமாலை | 1 | 00 |
| ஸ்ரீராமாயண ஸௌரபம் | 1 | 00 |
| ஸ்ரீராமாயண கௌஸ்துபம் | 1 | 00 |
| வைதிகமநோஹரா விளக்கம் | 1 | 00 |
| ஸ்ரீராமாநுஜ ஜயந்தி மலர் | 1 | 00 |
| நற்போதுபோக்கு | 1 | 00 |
| ஸ்ரீவைஷ்ணவ மஹாநிதி | 1 | 00 |
| ஸ்ரீராமாநுஜபூஷணம் | 1 | 00 |
| கம்பரின் பக்கவித்திரட்டு | 1 | 00 |
| நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியுரை | 1 | 00 |
| ஆழ்வார்களுகந்தராமன் | 1 | 00 |
| ஆழ்வார்கள் புகழ்ந்த கண்ணன் | 1 | 00 |
| ஸ்ரீரங்கஸ்ரீ:, ஸ்ரீரங்கச் செய்திகள் | 1 | 00 |
| கோதை தமிழ்ச்சுவையமுதம் | 1 | 00 |
| சாடுச்லோக சதகவுரை | 1 | 00 |
| தானேயெழுதியதன்சரிதை (ஆங்கிலம்) | 1 | 00 |
| கம்பர்கண்ட கண்டீரவம் | 1 | 00 |
| சங்கத்தமிழ்மாலை முப்பது | 1 | 00 |
| விலக்ஷணஜந்துபகாரம் | 1 | 00 |
| பண்டிதபோக்யபஞ்சாமிருதம் | 1 | 00 |
| பரமார்த்தரக்ஷா | 1 | 00 |
| அழுகையும் அழச்செய்கையும் | 1 | 00 |
| தொழுகையும் தொழச்செய்கையும் | 1 | 00 |
| பவித்ரயாத்ரா பரமானந்தம் | 1 | 00 |
| கண்டீரவாவதாரகாரண நிரூபணம் | 1 | 00 |
| விபவாவதார சோகதத்வம் | 1 | 00 |
| வரதன் ஸன்னிதி வரலாறு | 1 | 00 |
| தேவப்பெருமாள் ஸன்னிதி விமர்சம் | 1 | 00 |
| விசேஷார்த்த ரத்னநிதி | 1 | 00 |
| பிரபந்தசாரதத்வம் | 1 | 00 |
| பிரபந்தசார தத்வப்ரதிஷ்டா | 1 | 00 |
| திவ்யப்ரபந்தக் கண்ணாடி | 1 | 00 |
| வைதிகலௌகிக மஹநீயமண்டலி | 1 | 00 |
| வித்யாபரிச்ரமம் | 1 | 00 |
| ஆசார்யசம்பு அபிநந்தனம் | 1 | 00 |
| திவ்யப்ரபந்தஸாரத் திரட்டு | 1 | 00 |
| நான்கு தூதுகளின் மருமம் | 1 | 00 |
| த்ரௌபதீப்ரபாவ விவரணம் | 1 | 00 |
| விஷ்ணு ஸஹஸ்ரநாமவுரை | 1 | 00 |
| அர்ச்சாவதார வைபவம் | 1 | 00 |
| மாமுனிவன் மேற்கோள் விளக்கு | 1 | 00 |

### பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்

| | | |
|---|---|---|
| அத்புதசக்தி | 1 | 00 |
| சேஷாவதாரச் சிறப்பு | 1 | 00 |
| விதவாவபன விமர்சம் | 1 | 00 |
| ஜகதாசார்யஸூக்தி ஸுதாநிதி | 1 | 00 |
| தத்வஹிதோபதேசம் | 1 | 00 |
| மெய்ஞ்ஞான மேன்மை விளக்கு | 1 | 00 |
| வம்பவிழ்கோதை தத்துவம் | 1 | 00 |
| கோதை போலுமாராய்ச்சி | 1 | 00 |
| சிங்கப்பெருமாள் திருவாக்கு வெற்றி | 1 | 00 |
| ஒருமிதுனமே உத்தேச்யம் | 1 | 00 |
| ஸத்ஸம்ப்ரதாய பாஸ்கரன் | 1 | 00 |
| ரத்நபரீக்ஷா (வடமொழி) | 1 | 00 |
| நிகமபரிமள நித்யகல்யாணம் | 1 | 00 |
| தேசிக ஸஹஸ்ரநாம விமர்சனம் | 1 | 00 |
| தேசிகஸூக்தி பரிமளம் | 1 | 00 |
| ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் | 1 | 00 |
| ஆழ்வார்களின் காலநிர்ணயம் | 1 | 00 |

(விரிவான புத்தக ஜாபிதா காண்க.)

ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபா விளம்பரம்

1966 ஜனவரிமீ புதுப்பிக்கப்பட்ட ஸத்க்ரந்த ப்ரகாசன ஸபைக்கு வருடச் சந்தா ரூ. 25—00. செலுத்தி மெம்பர்களாகச் சேரவேண்டியது. அவர்களுக்கு ஸ்ரீராமாநுஜன் பத்ரிகை தனிச் சந்தா இல்லாமல் அனுப்பப்பட்டுவருவதுடன் இருபது ரூபா விலையுள்ள புத்தகங்களும் அளிக்கப்படும். அவர்கள் நம்முடைய புத்தக ஜாபிதாவைத் தருவித்துப் பார்த்து அதில் தங்களுக்கு விருப்பமான (20 ரூ. விலையுள்ள) நூல்களுக்கு ஆர்டர் செய்யலாம்.

இப்படிக்கு,
ஷை ஸபையின் பிரஸிடெண்டு P. B. A.

நமது ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாய நூல்கள் கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்–3.

(2) V. N. Devanathan,
213. Govindappa Naicken St., G. T. Madras.

(3) M. A. KRISHNAMMAL, Advocate,
20, South Mada Street, Triplicane, Madras-5.

(4) A. RAMANUJACHARI, B. A.,
A 230 E. Type, Pandara Road, New Delhi.-11.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**

KANCHEEPURAM-3.

5







Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press.
Sannidhi Street, Kanchipuram-3.